# பாதுகாப்பு மிகுந்த ஓர் குடும்பம்

ஆம், பி.ஐ. கர்லிங் பிரேக் உறுப்புகளின் குடும்பம் — மறக்க முடியாத குடும்பம். உங்கள் பிரேக் சாதனத்திற்கு மாற்று உறுப்புகள் தேவைப்படும்போது இக்குடும்பத் தைத் தேடி வாருங்கள். ஒவ்வொரு தடவையும் நம்பகமான பாதுகாப்பிற்கு உறுதியளிப்பது பி.ஐ. கர்லிங்.

பிரேக் உறுப்புகளுக்கு மாற்று உண்டு — உங்கள் உயிருக்கு மாற்று உண்டோ? ஆகவே மட்டரக பிரேக் உறுப்புகளைத் தவிர்த்துவிடுங்கள்.

அசல் உறுப்புகளுக்கு இணையான சீரிய தரத்தினைப் பெற்றிருக்கும் மாற்று உறுப்புகள் தடையற்ற தொடர்ச்சியான பிரேக் பாதுகாப்பிற்கு இன்றியமையாதவை. உண்மையில் மலிவான அல்லது தரமற்ற உறுப்புகள் காலடைவில் உங்களை அதிகச் செலவினில் கொண்டு விட்டுவிடும் — உங்கள் உயிரினையே கூட குடித்துவிடும்.

உங்கள் பிரேக்குகள் பாதுகாப் புடன் இயங்க, அசல் பி.ஐ. கர்லிங் உறுப்புகளையே உரிமை பெற்ற விற்பனையாளர்களிடம் வாங்குங்கள்.

பிரேக் பாதுகாப்பு மற்றும் பராமரிப்புக்கான விலை மதிப் பற்ற பல குறிப்புகள் அடங்கிய ஆங்கிலப் புத்தகத்தை இலவச மாகப் பெறுவதற்கு உங்கள் பெயர் மற்றும் விலாசத்தை தெளிவாக எழுதுங்கள்.

பிரேக்ஸ் இந்தியா லிமிடெட்
பாடி, சென்னை 600 050

SAA/BI/2665





⌘ வாஷிங்டன் விமான நிலையத்தில் இந்திய சமூகத்தினர் வரவேற்பு

⌘ சிரித்த முகத்துடன் தமிழக முதல்வர்



# தமிழக முதல்வரும் அமெரிக்கத் தமிழர்களும்

வாஷிங்டனில் உள்ள கல்கி அன்பர்கள் அங்கு திரு எம். ஜி. ஆர். அவர்கள் விஜயம் செய்தது பற்றிப் பின்வரும் செய்திக்குறிப்பும் படங்களும் அனுப்பியுள்ளார்கள். அவற்றை எல்லாம் கல்கி நேயர்களுடன் பகிர்ந்து கொண்டு மகிழ்கிறோம். —ஆசிரியர்.

தமிழக முதலமைச்சர் திரு எம். ஜி. ஆர். நவம்பர் 3ம் தேதியன்று லண்டனிலிருந்து புறப்பட்டு அன்று பிற்பகல் 2 மணிக்கு வாஷிங்டன் வந்து சேர்ந்தார். வாஷிங்டன் டல்லஸ் விமான நிலையத்தில் தமிழ் மன்றத்தலைவரும், தமிழ் கலாசாரச் சங்கத் தலைவரும் மாலை போட்டு முதல்வரை வரவேற்றனர். வாஷிங்டன் நகரத் தமிழ் மக்களும் வந்து முதல்வரை வரவேற்றார்கள். இந்தியத் தூதராலயத்தின் உபதலைவரும், அமெரிக்க அரசின் நிருபரும் அவரை வரவேற்றார்கள். இங்கு வாஷிங்டனில் போலீஸ் இலாகா, சிறு தொழில் இலாகா, விவசாய இலாகா மற்றும் பல இலாகாக்களின் தலைவர்களைத் திரு. எம்.ஜி.ஆர். சந்தித்துப் பேசினார். உலக வங்கியின் (World Bank) உப தலைவரைச் சந்தித்து உலக வங்கி செய்யும் பணிகளைப் பாராட்டினார். 'ஏழைமை என்றால் என்ன என்பதை வாழ்க்கையிலேயே உணர்ந்த ஒருவரின் பேச்சு ஆனதால் உருக்கமாகவும் உபயோகமாகவும் இருந்தது' என உலக வங்கி உயர் அதிகாரி ஒருவர் குறிப்பிட்டார். தமிழ் நாடு அடைந்துவரும் முன்னேற்றங்களைப் பற்றியும், அதன் தேவைகளைப் பற்றியும் உரையாடினார். நவம்பர் 11ம் தேதி இரண்டு தமிழ்ச் சங்கங்களும் ஒரு பொதுக்கூட்டம் ஏற்பாடு செய்து முதல்வரை வரவேற்றுக் கௌரவித்தன. இந்தப் பொதுக் கூட்டத்தில் முதல்வர் சிறப்புரைக்குப் பிறகு கேள்விகளுக்கும் பதில் அளித்தார். அன்றிரவு தமிழ் மன்றம் முதல்வருக்கு விருந்து அளித்துக் கௌரவித்தது.



⌘ இந்தியத் தூதர் பால்கிவாலாவோடு எம்.ஜி.ஆர்.

⌘ ஹோட்டல் சித்தார்த்தாவில் தமிழ் மன்றம் அளித்த விருந்தில்.



**வி**ழாவிலே நீளமான படம் 210 நிமிஷம் (மூன்றரை மணி!) ஓடிய பெல்ஜியப் படம் தான். படத்தின் தலைப்பும் மிக நீளம்: ''ஜான் டியல்மன், 23 கா டி காமர்ஸ் 1080 பரஸ்ஸல்ஸ்!'' ஒரு சாதாரண குடும்பப் பெண் மணி — கம் — விலைமகளின் மூன்று நாள் வாழ்க்கையை ஆற அமரக் காட்டினார்கள். படம் நகரவே இல்லை. வசனம் மொத்தம் 20, 30 வரிகள்தான். இசை கிடையாது. உதாரணமாக அவள் உருளைக் கிழங்கைத் தோல் சீவுகிறாள் என்றால், எல்லாக் கிழங்கையும் தோல் சீவுவதை 10 நிமிடம் காட்டுகிறார்கள். காமிரா நகர்த்தப்படுவதோ க்ளோஸ் அப்போ கிடையாது. நீளப்படம், நீலப்படமாக இருக்குமோ என்று ஆரம்பக் காட்சிகள் 'ஆர்வத்தை' உண்டாக்கின. அதிலும் ஏமாற்றம்.

● அகதா கிறிஸ்டியின் கதையான 'டெத் ஆன் தி நைல்' படத்தைப் பார்க்க இந்திரா காந்திவந்திருந்தார். படத்தில் ஐ.எஸ். ஜோஹரும் நடித்திருந்தார். அவரது பெயர் திரையில் காட்டப்பட்டபோது சில ரசிகர்கள் கைதட்டினார்கள்.

● கைத்தடி ஊன்றிக் கொண்டு தட்டைக் குல்லாய் அணிந்து கொண்டு கவர்ச்சிகரமான ஓர் இளைஞர் படம் பார்க்க வந்திருந்தார் — சில நாட்கள். 'என்னடா சப்பாணி மாதிரி விந்தி விந்தி நடக்கிறாரே என்று பார்த்தால் நம்ம 'சப்பாணி' கமல்தான். காலில் எலும்பு முறிவாம். கமலின் ஆர்வம் வாழ்க!

● பாசு, சாட்டர்ஜியின் 'கட்டா மீட்டா' படமும் எகிப்து நாட்டின் எ வொர்ல்ட் ஆஃப் சில்ட்ரன் படமும் கிட்டத் தட்ட ஒரே மாதிரியாக இருந்தன.

● பெல்ஜிய டைரக்டர் மீஸ் சண்டல் அக்ரமன் கூறியது: படம் தயாரிக்க அரசாங்கம் கடன் கொடுக்கிறது. படம் வெற்றி அடைந்தால் கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டும். படம் ஓடாவிட்டால், கடனை அடைக்கவேண்டிய நிர்ப்பந்தம் கிடையாது!

● பாசு சாட்டர்ஜி கூறியது: பிலிம் பைனான்ஸ் கார்ப்பரேஷனிடமிருந்து சுமார் 2 லட்சம் கடன் வாங்கி 'சாரா ஆகாஷ்' எடுத்தேன். படம் வசூல் தரவில்லை. கடன் வசூலிக்க கோர்ட் நோட்டீஸே கொடுத்துவிட்டார்கள். நல்ல காலம், அப்போது ரஜினி கந்தா வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருந்தது. ஒரே 'செக்' எழுதிக் கடனை அடைத்தேன்.

● ஜெர்மானிய டைரக்டர் ஃபாஸ் —பைண்டர் புகழ் பெற்றவர். அவரது படம் 'டெஸ்பேர்' மனோதத்துவ ரீதியில் எடுக்கப்பட்ட படம். தன்னையே பிரிந்து தூர நின்று, மனைவியுடன் தான் காதல் பண்ணுவதைப் பார்க்க வேண்டும் என்பது போன்ற விசித்திர எண்ணங்கள் உடையவன், இவனைப் போலவே இருக்கும் ஆசாமியைச் சந்திக்க நேருகிறது. தொழிலில் நஷ்டம் ஏற்பட்டிருந்ததால், தன் உடைகளை அவனுக்குப் போட்டு அவனைக் கொலை செய்து விடுகிறான். அவனுடைய பெயரில் இவன் வாழலாம் என்பது திட்டம். ஆனால் அகப்பட்டுக் கொள்கிறான்.

பல இடங்களில் குழப்பம் ஏற்பட்டாலும் டைரக்டர் திறமைசாலி என்பது 'மொத்தத்தில்' வெளிப்படுகிறது. (குட்டி தகவல்: இவரது மற்றொரு படத்தை செலக்ஷன் கமிட்டி நிராகரித்து விட்டதாம். காரணம்: ரொம்ப ரொம்ப சர்வ சாதாரணமாக இருந்தது.)

● 1978ல் எடுக்கப்பட்ட படங்களில் அதிக எண்ணிக்கை மலையாளப் படங்கள் தான். மொத்தம் 123 படங்கள். அடுத்தது இந்தி 122.



✖ பு. கே: டெத் ஆன் தி நைல

✖ ஆக்னீஸ்லேவா: சம்மர் பீஸ்ட் >



✕ பிரான்சு: 'டு இல் எ ராட்'

மூன்றாவது இடத்தைத் தமிழும் (105) நான்காவதைத் தெலுங்கும் (94) பிடித்து இருந்தன.

- விழாப் படங்களைத் தேர்ந்தெடுக்க 17 பேர் கொண்ட கமிட்டியை அமைத்திருந்தார்கள். இதில் 12 பேர் டில்லிக்காரர்கள். டில்லி ஆசாமிகள்தான் எல்லாவற்றிலும் கரை கண்டவர்களோ!

- பெல்ஜிய நாட்டில் வருஷத்திற்கு நாலு படங்கள் எடுத்தால் அதிகமாம். டி. வியில் 10 சானல்கள் வருகின்றன. அதில் 5 சினிமா படங்களாக இருக்குமாம். டி. வியுடன் சினிமா போட்டி போட முடியவில்லை.

- செக்கோஸ்லாவிய படம் 'ஆப்பிள் கேம்' ஒரு 'செக்ஸ்' லோலிய படம்! டாக்டர் ஒருவர் ஆஸ்பத்திரியில் பணியாற்றும் நர்ஸுகளையெல்லாம் கணக்குப் பண்ணுகிறார். இந்தப் படம் அந்த நாட்டில் பெருத்த கூக்குரலை எழுப்பியதாம் – முக்கியமாக டாக்டர்களிடமிருந்து. பரந்த வெளியில் இறந்த மேனிகள் உண்டு. லேசான நகைச்சுவை, வெங்காய சருகு ஆடை உள்ள இப்படத்தில் காதல் காட்சிகளைக் குறைத்து இருந்தால் சிறந்த படமாக அமைந்திருக்கும். டைரக்டர்: ஒரு பெண்மணி.

- சைனாவின் மூன்று படங்கள் விழாவில் பங்கு பெற்றன. நல்ல தெளிவான ஆங்கில வசனம் (டப்பிங்?) கலர் அபாரம். முத்துக் குளிக்கும் பெண்களைப் பற்றிய துண்டுப்படத்தில் பெண்கள், கலர், இசை எல்லாம் முதல் தரம்.

# 7iffi சர்வதேசத் திரைப்படவிழா





பாங்கு ஊழியர்: என்னடி இன்னுமுமா சாப்பாடு ஆகலே? பசி உயிர் போறுது!

பாங்கு ஊழியர் மகள்: அப்பா! நீ அம்மா இன்னிக்கு சினிமா போறதுக்குக் காக குடிக் காதிலிலே 'கோ-ஃஸ்லோ' 'வொர்க் டு ரூல்' பாலிஸியை எடுத்துண்டு இருக்கா. சாப்பாட்டுக்கு நேரமாகும்!

''பாதுஷா''

---

● இசை என்னும் போது பிளாசா காட்சிகளுக்கு வந்திருந்த இரண்டு மூன்று பேர் கையில் கொண்டு வந்திருந்த டேப்ரிகார்டர்களைப் பற்றிக் குறிப்பிட வேண்டும். எந்த மியூசிக்எந்த இந்திய படத்தில் வரப்போகிறது என்று பார்க்கலாம்!

● 'ஐ எம் ஃபெட் அப்' என்ற அர்ஜன்டினா படம் நல்ல நகைச்சுவை. 'கணவனுக்கும் இரண்டு குழந்தைகளுக்கும் உழைப்பதே வேலையா? எனக்கு ரெஸ்ட் வேண்டாமா?' என்று அலுத்துக் கொள்ளும் பெண்மணி கடற்கரை நகரத்துக்கு உல்லாசப்பயணம் செல்கிறாள். அங்கு பல சிரிப்புச் சம்பவங்கள். அவளைக் காதலிக்க முயலும் சில இளஞ் சிட்டுகள். கணவனுக்குத் தகவல் தெரிந்து அவன் வருகிறான். இரண்டு பேரும் கிட்டத் தட்ட ஒரே மாதிரி நாடகம் ஆடுகிறார்கள். கடைசியில் ஒன்று சேருகிறார்கள். இயற்கையான வசனம். நடிப்பு, கடற்கரைக் காட்சிகளில் கவர்ச்சி அதிகம்! அப்படியே இது தமிழ்ப்படமாக வந்தாலும் வியப்படைய மாட்டேன்!

● நகைச்சுவைப் படங்களில் இத்தாலி படம் 'லவர்ஸ் அன்ட் லூனடிக்ஸி'ற்கு முக்கிய இடம் உண்டு. இறந்து போன மனைவி உயிருடன் இருப்பதாக எண்ணி அவளுடன் பேசி, விளையாடிச் சல்லாபித்துப் பொழுது போக்கும் பெரிய செல்வந்தன்; அவன் வீட்டுக்கு வந்த ஒரு பியானோ கலைஞன் இவர்களை வைத்துத் தமாஷாக எடுத்திருந்தார்கள். செல்வந்தனை ஓர் இக்கட்டிலிருந்து காப்பாற்ற இல்லாத மனைவியின் இடத்தில் ஒரு பெண்ணைக் கொண்டு வருகிறான் பியானோ கலைஞன். அவள் உண்மை மனைவியாக உரிமை எடுத்துக் கொள்கிறாள். சுரண்டுகிறாள். அவளைக் கை கழுவுவதற்குப் படாதபாடு படுகிறான். கடைசியில் அவளை ஒரு ராட்சத பலூனில் வைத்து ஆகாயத்தில் விட்டு விடுகிறான். செல்வந்தன் பழைய படி காலியாக உள்ள நாற்காலியைப் பார்த்துக் காதல் வசனம் பேசுகிறார். நல்ல பொழுதுபோக்குப் படம். இசையும் ரொம்ப ஜோர். பியானோ கலைஞனின் 'ஜயோ பாவ' முக அழகு மறக்க முடியாது.

● ஜாஸ் இசை இவ்வளவு கண்டி இழுக்குமா? அடாடா! ஸ்வென் க்ளேங் குவின்டட் (ஸ்வீடன்) படம் பாப் இசைக் கலைஞர்களைப் பற்றியது. கிளாரினட் பிரமாதம்.

● கான்வாய்: இது அமெரிக்கப் படம். பிரம்மாண்ட ராட்சஸ டிரக்குகள் இதில் வன்முறையில் ஈடுபட்டிருந்தன. ஆம், பயங்கரமாக உறுமிக் கொண்டு போலீஸ்காரர்களை இவை சின்னாபின்னப் படுத்தியது நம் தலையைச் சுற்ற வைக்கிறது. போலீஸின் லஞ்சத்தை எதிர்க்கும் டிரக் டிரைவர்கள் போராடுகிறார்களாம். படத்தைப் பார்த்து நமக்கே பெரிய பயணம் சென்ற மாதிரி அசதி.

● பின்லாந்து படம்: மென் கான்ட் ரேப்ட் (ஆண்களைக் கற்பழிக்க முடியாது!) ஆரம்ப முதல் முடிவு வரை நம்மை ஆக்கிரமித்த படம். ஆபாசம் இல்லை. முன்பின் தெரியாத ஒருவனால் கற்பழிக்கப் பட்ட பெண் அவனை மிகுந்த சிரமத்திற்குப் பின்பு கண்டு பிடித்து, துப்பாக்கி முனையில் அவனை நிர்வாணமாக்கிக் கட்டிலில் கட்டிப் போட்டு அவனைக் ''கற்பழிக்கிறாள்''! போலீசில் சரணடைகிறாள்.

''நீங்கள் என்ன குற்றம் செய்தீர்கள்?'' போலீஸ்காரர்.

''ஓர் ஆசாமியைக் கற்பழித்தேன்!''

''அம்மணி. ஒரு ஆண் பிள்ளையைக் கற்பழிக்க முடியாது!''

இத்துடன் படம் முடிவுறுகிறது. கற்பு என்பது இருபாலாரும் கடைப்பிடிக்க வேண்டியது என்று ஆண்டாண்டு காலமாய்ப் பேசி, எழுதி வருகிறோம். ஆனால் நடைமுறையில்...? இதைத்தான் வக்கிரமான முறையில் வெளியிடுகிறது படம்.

● துருக்கியும் ஸ்விட்சர்லாந்தும் சேர்ந்து எடுத்த படம்: தி பஸ். வேலை தேடிக் கள்ளத்தனமாக வந்த சில தொழிலாளிகள் படும் பாட்டை நன்றாகச் சித்திரித்திருந்தார் துருக்கி டைரக்டர் பே ஓகன் (இவர் நடித்தும் இருந்தார்). பஸ்ஸில் ஏற்றிவந்து பணத்தைப் பறித்துக் கொண்டு அனாதையாக அவர்களை விட்டுவிட்டு ஒருவன் ஓடிவிடுகிறான். அவன் பாரிசில் குஷியாக இருக்கிறான். இவர்கள் மூன்று தினங்கள் பஸ்ஸை விட்டு இறங்கப் பயப்பட்டு அவதிப்படுகிறார்கள். கடைசியில் போலீசில் அகப்பட்டுக் கொள்கிறார்கள். அடிப்படை நல்ல கருத்துதான்; ஆனால் சர்வ சாதாரணக் கதையாக அமைத்து விட்டார் டைரக்டர். இதில் ஏதோ இரண்டு மூன்று இடத்தில் சிறிது செக்ஸ் காட்சி வருகிறது: ஆகவே இப்படம் திரையிடப் பட்ட தியேட்டரில் ஒருநாள் குழப்பம் ஏற்பட்டது — ரசிகர்களால்!

— கமலா ரங்கநாதன்

---

“கடவுள் அடிக்கடி நம்மிடம் வருகிறார்; ஆனால், பெரும்பாலும் நாம்தான் அந்த நேரம் வீட்டில் இருப்பதில்லை”

— பிரான்ஸ் பழமொழி



# கல்கி

1979 பிப்ரவரி 4
காளயுக்தி தை 22

மலர்: 37 இதழ்: 37


தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# மகிழ்கிறோம், ஆனால்....

**பா**ங்கு ஊழியர்கள், அதிகாரிகள் தங்கள் வேலைநிறுத்தத்தை மட்டுமின்றி இதர பல போராட்டமுறைகளையும் வாபஸ் பெற்றுக் கொண்டு விட்டார்கள். ''அப்பாடா!'' என்று பொது மக்களும், வியாபாரிகளும், தொழிலதிபர்களும் நிம்மதிப் பெருமூச்சு விடலாம். ஆனால்...

சரண்சிங் துணைப் பிரதமராகி மத்திய அமைச்சரவையில் சேர்ந்து விட்டார். நிதி இலாக்கா அவர் பொறுப்பில் விடப்பட்டுள்ளது. ஜகஜீவன்ராம் இவரைவிடத் தாழ்ந்து போய் விடக்கூடாது என்பதற்காக அவரும் துணைப் பிரதமராக்கப்பட்டுள்ளார். ஜனதாவின் உட்பூசல்கள் தீர்ந்து, இனி தேச நலனை முழுமையாக மனத்தில் கொண்டு மத்திய அரசு செயல்படும் என்று மக்கள் எதிர்பார்க்கத் தொடங்கலாம். ஆனால்...

ஹிந்தி திணிப்பை எதிர்ப்பதற்காக முதலமைச்சர் அனைத்துக் கட்சிகளின் மகாநாட்டினை வெற்றிகரமாக நடத்தி முடித்தார். சட்டசபையில் ஹிந்தி திணிப்பை எதிர்த்து ஒரு தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றி வைக்கப்படும் என்றும் முடிவாகி யுள்ளது. மகிழ்கிறோம். ஆனால்...

**பா**ங்கு ஊழியர்களின் கோரிக்கைகள் மிக அதிகமானவை, ஏற்கப்பட இயலாதவை என்று இத்தனை காலமாகக் கூறி வந்த பாங்கு நிர்வாகமும் அரசும் இப்போது பல்டி அடித்துச் சரணாகதி அடைந்து விட்டதாகவே தோன்றுகிறது. ஒரு தீர்வு காண்பதற்குரிய திட்டமாக அரசும் நிர்வாகமும் ஏற்றுக் கொண்டிருக்கும் அம்சங்களைக் கவனிக்கையில் இத்தகைய முடிவுக்கே நாம் வர வேண்டியிருக்கிறது. இதுதான் முடிவு என்றால் இதை என்றைக்கோ விட்டுக் கொடுத்து மக்களுக்கும் தேசப் பொருளாதாரத்துக்கும் கஷ்டநஷ்டங்களைத் தவிர்த்திருக்கலாம். அடித்தள ஊழியர்கள் விலைவாசி புள்ளி உயர்வினை நூறுசதம் ஈடுகட்டுகிறமாதிரி கிராக்கிப்படி பெறுவார்கள்; மற்ற ஊழியர்களுக்கு 75 சதம் ஈடுகட்டப் படும் என்றால் பூதலிங்கம் கமிட்டி சிபாரிசைக் குப்பைத் தொட்டியில் போட்டாகி விட்டது என்று அர்த்தம். அடுத்து அதிகாரிகள் விஷயமாக பிள்ளை கமிட்டி சிபாரிசுக்கும் 'குட்பை' கூறப்படும் என்று எதிர்பார்க்கலாம். செயல்திறன் பற்றி அதிகாரிகளும் ஊழியர்களும் உறுதி யளிக்க வேண்டும் என்று நிர்வாகத்தினர் செய்து வந்த கெடுபிடியும் தளர்ந்து போய்விட்டது. ஊழியர்கள் மனமிருந்தால் வேலை செய்வார்கள்; இல்லை என்றால் இல்லைதான்.

1977ல் பாங்குகளின் ஒட்டு மொத்தமான லாபம் 48 கோடி. 1978ல் இதைவிடக் குறைவாகவே இருக்கும் எனக் கருதலாம். இப்போது தீர்வு காண்பதற்குரிய திட்டமாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பது அப்படியே அமுலானால் பாங்குகளுக்கு ஏற்படக்கூடிய அதிகப்படி செலவு 39 கோடி. இதில் சேராமல் போனஸ் பிரச்னை வேறு பாக்கியிருக்கிறது என்னும் போது இந்த லாபக் குறைவை ஈடுகட்ட பாங்குகளின் வட்டி விகிதம் அதிகரிக்கும் என எதிர்பார்க்கலாம். அதிக வட்டி தரப்போகிற வியாபாரிகளும் தொழிலதிபர்களும் உற்பத்தியாகும், விற்பனையாகும் பண்டங்களின் விலைகளை உயர்த்துவார்கள். போதாக் குறைக்கு பாங்கு ஊழியர்களுக்கு அதிகப்படியாக வழங்கப்பட விருக்கிற 39 கோடி ரூபாய் அந்த அளவுக்குப் பணவீக்கத்தை அதிகரித்து விலைவாசிகள் உயரக் காரணமாகும். விலைவாசி உயர்வால் ஸ்ரீமான் பொதுஜனத்தின் அவதி அதிகரிக்கும். தாங்கித் தாங்கிப் பழகிப் போன அவர் இதையும் தாங்குவார்.

**ச**ரண்சிங் துணைப் பிரதமரானது பெரிய விஷயமல்ல. மூன்று தரப்பினரும் பழைய கசப்பான சம்பவங்களை யெல்லாம் மறந்தார்களா என்பது

தான் முக்கியம். காந்தி தேசாய் விவகாரம், சுரேஷ் குமார் விவகாரம் போன்றவற்றையெல்லாம் உள்ளத்திலிருந்து ஒதுக்கி, தூய வெள்ளை மனத்துடன் காழ்ப்புணர்ச்சி சிறிதும் இன்றி, கரம் கோத்து, ஒற்றுமையாக மூவரும் செயல்படப் போகிறார்களா என்பது தான் கேள்வி. சரண்சிங்கின் ''செல்லப் பிள்ளை'' ராஜ்நாராயண், சரண்சிங் பதவி ஏற்பதற்கு முதல்நாள் கூட, ''மொரார்ஜி தேசாயைப் பதவியிலிருந்து இறக்குவோம்'' என்று பேசியுள்ளார். அதற்கு முதல் படியாகத்தான் சரண்சிங் அமைச்சரவையில் சேர்ந்தார் என்றால், ஜனதா அரசு இன்னும் ஸ்திரத் தன்மை அடையவில்லை; சமீபகாலத்தில் அடையப் போவதுமில்லை என்றே அர்த்தம். இதற்கு இடமளிக்காத வகையில் நட்பும் நேயமும் தோழமையும் வளர வேண்டும் என்பதே மக்களின் பிரார்த்தனை.

மற்றொன்று. தடியெடுத்தவன் தண்டல்காரன் என்பதுபோல் அமைச்சரவையில் தலைக்குத் தலை ஏதேதோ பேசுகிறார்கள். கேட்டால், ''அது அவர்களுடைய தனிப்பட்ட அபிப்பிராயம்; அரசின் கொள்கை அல்ல'' என்று பிரதமர் விளக்கம் தருகிறார். இந்தப் போக்கு, அமைச்சரவையிடம் மக்களுக்கு நம்பிக்கையை வளர்க்கக் கூடியது அல்ல. மக்களிடம் மட்டுமின்றி ஆட்சியிலும் — அதிகாரிகள், ஊழியர்கள் மத்தியில் — குழப்பத்தையே அதிகரிக்கும். ஜனதா அரசின் அடிப்படைக் கொள்கைகள் என்ன என்பது நிர்ணயிக்கப்பட வேண்டும்; அவற்றை எப்படி நிறைவேற்றப் போகிறார்கள் என்பதற்குச் செயல் திட்டம் தேவை. தனிப்பட்ட விருப்பு வெறுப்புக்களை ஒதுக்கி, அமைச்சரவையால் ஒப்புக் கொள்ளப்பட்ட திட்டத்தை நிறைவேற்றி வைக்கிற உறுதியையும் கடமை உணர்வையும் அமைச்சர்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும்.

**ஹி**ந்தி திணிப்பு எதிர்ப்புக்கு சர்வகட்சி மகாநாடு கூட்டிய முதல்வர் எம். ஜி. ஆர்., 'ஹிந்தி திணிப்பு இராது' என்று சொன்னதற்காக மொரார்ஜிக்கு நன்றி கூறி தந்தி அடித்திருக்கிறார். ஹிந்தி திணிப்பு கூடாது என்று சட்டசபையில் ஏகமனதான தீர்மானம் நிறைவேற்ற முன்வரும் முதல்வர், ஹிந்தி விஷயமாகப் பிரதமரைத் தாம் நம்புவதாக அறிக்கை விடுகிறார். இவற்றில் முரண்பாடு தெரிகிறது நமக்கு.

நம்பிச் செயல்படுவது நல்லதுதான். ஆனால் யாரை நம்புகிறோம், எதற்காக நம்புகிறோம் என்று பார்க்க வேண்டும். மொரார்ஜி தேசாய் ஹிந்தி ஆதரவாளர் என்பதை விட, ஹிந்தி வெறியராகவே காட்சியளிக்க ஆரம்பித்திருக்கிறார். ''தேசபக்தி உள்ளவர்கள் ஹிந்தி கற்க வேண்டும்'' என்று அவர் கூறும்போது, ஹிந்தி கற்க விரும்பாத, ஹிந்தி மற்ற தேசிய மொழிகளுடன் சம அந்தஸ்து மட்டுமே பெற்றிருக்க வேண்டும் — மேலாதிக்கம் பெறக் கூடாது என்று உறுதியாக நம்புகிற கோடிக் கணக்கான இந்தியர்களை மொரார்ஜி அவமதிக்கிறார். 'ஹிந்தி திணிப்பு இராது' என்று சொல்கிறாரே யொழிய, மறைமுக ஹிந்தி திணிப்பு கூட இராது என்று கூறவில்லை. மருத்துவத் துறை மட்டுமின்றி சகல துறைகளிலும் பிராந்திய மொழிகளுக்கே முதலிடம் கொடுங்கள், ஆங்கிலத்தை ஒதுக்கி விரட்டி அடியுங்கள் என்னும்போது பிரதமரும் மற்றவர்களும் ஹிந்தி ஏகாதிபத்தியத்துக்கே ராஜ பாட்டை அமைக்கிறார்கள். 'ஹிந்தி விஷயமாக சட்டப்படித்தான் எல்லாம் நடக்கும், சட்டத்தை மீறியல்ல' என்கிறார் மொரார்ஜி. சட்டப்படி எல்லாம் நடக்கவேண்டும்என்பதல்ல நமது கோரிக்கை. ஹிந்தி திணிப்பு இராது என்பதற்கும் பாரத மொழிகள் அனைத்தும் ஹிந்திக்குச் சமமான அந்தஸ்தைப் பெற வேண்டும் என்பதற்கும் சட்டமே மாற்றப்பட வேண்டும் என்பது தான் நமது நீண்ட நாளையப் போராட்டம். அரசியல் சாசனமே இதற்காக மாற்றப்பட வேண்டும் என்பதில் நாம் உறுதியாக இருக்கிறோம். முதல்வர் எம். ஜி. ஆர். இவற்றை உணராதவர் அல்ல. அவர் வன்மையாகக் குரல் எழுப்ப வேண்டும் என்று விரும்புகிறோம்.

ஜனதா அரசுக்கு ஒத்துழைப்புத் தர வேண்டிய வேறு எத்தனையோ பல அம்சங்களில் அவர் முழு ஒத்துழைப்புத் தரட்டும்; வரவேற்கிறோம். ஹிந்தி விஷயத்தில் பிரதமரை முழுமையாக நம்பிவிட வேண்டாம் என்றும் எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டுமென்றும் முதல்வரைக் கேட்டுக் கொள்கிறோம்.






உ.பி.
ஜனதா
கட்சி ஒற்றுமை
நான் உங்களுக்கு வாகனமாக இருக்கிறேன்! 'ஆர்.எஸ்.எஸ்'ஸை ஒழித்துக் கட்டி விடுவோம்!


நான் தான் எதிர்ப்பேன்! அவருக்கு எதிர்க்கத் தெரியாது!
நான் தான் எதிர்ப்பேன்!... அவருக்கு எதிர்க்கத் தெரியாது!
இந்தி திணிப்புக்கு எதிர்ப்பு



# ஆட்சேபணையும் அதற்கொரு பதிலும்!



● ''கல்கி'' 17-12-1978 இதழில் ஸ்ரீபால முரளி கிருஷ்ணாவைப் பற்றி கொடுக்கப்பட்டுள்ள விவரங்களைப் படிக்க நேர்ந்தது.

அதில் ''ப்ரதிமத்யமாவதி'', ''ரேவதி,'' ''ஹம்ஸவிநோதினி'' (மற்றும் இரண்டு) ராகங்கள் பாலமுரளியால் தோற்றுவிக்கப் பட்டன என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. (''சங்கீத வித்வத் சபை''யினரின் இவ்வருடத்திய மலரிலும் பாலமுரளியை அறிமுகப்படுத்தும் கட்டுரையில் இதே விவரம் குறிப்பிடப் பட்டிருக்கிறது). எனக்குத் தெரிந்தவரை பாலமுரளியும் நானும் பிறக்கும் முன்பே அச்சிடப்பட்ட சங்கீதப் புத்தகங்களில், (அதாவது 'சங்கீத ஸ்வரப்ரஸ்தாரஸாகரமு'' என்ற தெலுங்கு புத்தகத்திலும், ''சங்கீத சந்திரிகை'' என்ற தமிழ்ப் புத்தகத்திலும்), ''ரேவதி'' எனும் ராகம் ரத்னாங்கி மேளகர்த்தாவின் ஜன்யமாகவும், ''ப்ரதிமத்யமாவதி'' என்று இவர் புதுப்பெயர் சூட்டிய ராகம் மேற்கூறிய ஒரு புத்தகத்தில் ஏற்கெனவே ''யோகினி'' (ஹேமவதி ஜன்யம்) என்றும், மற்றொரு புத்தகத்தில் ''ப்ருந்தாவன சாரங்கா'' (வாசஸ்பதிஜன்யம்) என்றும், ''ஹம்ஸவிநோதினி'' என்ற ராகம் (சங்கராபரணம் ஜன்யம்) அதே பெயரிலும் காணப்படுகின்றன. பழைய ராகங்களைத் தம்முடைய கற்பனையால் புதிதாகத் தோற்றுவித்தார் பாலமுரளி என்று கூறுவது கண்டிக்கத் தக்கது. ஏற்கெனவே பெரியோர்களால் முன்னோர்களால் உண்டாக்கப்பட்டிருக்கும் பழைய ராகங்களில் அவர் புதிதாக க்ருதிகள் சுவனம் செய்வதை யாரும் ஆக்ஷேபிப்பதற்கில்லை.

சென்னை—4

வீணை வித்வான்
எஸ். பாலசந்தர்

திரு பாலசந்தர் அவர்களின் கடிதம் பற்றி திரு பாலமுரளி கிருஷ்ணாவிடம் கேட்டபோது அவர் அது பற்றி ஏதும் கூறத் தாம் விரும்பவில்லை என்று சொல்லி விட்டார். பாலமுரளி கிருஷ்ணாவின் வாழ்க்கைத் துணைவி ஸ்ரீமதி அபயாம்பிகா பின்வருமாறு சொல்கிறார்:

ஸ்ரீ பாலமுரளி கிருஷ்ணா பற்றி கட்டுரை அகாதமி மலரில் இடம் பெற்றிருந்தது. அதை ஆதாரமாகக் கொண்டு கல்கியிலும் வெளியாகியிருந்தது. அகாதமி கட்டுரை ஸ்ரீபால முரளி அவர்களே எழுதியது அல்ல. அவர் கூறியதைக் கேட்டு எழுதப் பெற்றது. இச் சந்தர்ப்பங்களில் கருத்துக்கள் இலேசாக மாறுபட்டுவிடுவது உண்டு.

ரேவதி, பிரதிமத்தியமாவதி, ஹம்ஸ விநோதினி ஆகிய ராகங்கள் பற்றி ஸ்ரீபால சந்தர் கூறியுள்ளார். பழைய நூல்களில் காணப்படும் ரேவதி ராகத்துக்கும் ஸ்ரீபால முரளி ரேவதி என்று உருவாக்கிய ரேவதி ராகத்துக்கும் வேறுபாடு உண்டு. இதை எழுதியோ படித்தோ தெரிந்து கொள்ள முடியாது. நுணுக்கமாகக் கேட்டறிந்துதான் உணர இயலும்.

ஹம்ஸ விநோதினி, பிரதிமத்தியமாவதி இந்த இரண்டு ராகங்களையும் தம்மையறியாமல் தாம் இன்னிசை நிகழ்ச்சிகளில் பாடியதாக ஸ்ரீபாலமுரளி குறிப்பிட்டார். அதாவது முன் தயாரிப்பின்றி - inspired ஆக. இவ் விவரம் எழுதப்படும்போது மாற்றத்துக்கு உள்ளாகியிருக்கிறது.

இந்த விஷயம் எப்படியானாலும் டாக்டர் பாலமுரளி கிருஷ்ணா பல புது ராகங்களை உருவாக்கிக் கொடுத்தவர் என்பதும் பல அபூர்வ ராகங்களைப் பிரபலப் படுத்தியவர் என்பதும் வாக்கேயக்காரர் என்பதும் இசை உலகம் நன்கு அறிந்த விஷயம். சூரியனைக் கையால் மறைக்க முடியுமா? திரு பாலசந்தர் மேடைகளிலும் பத்திரிகைகளிலும், பிற வித்வான்களை மனம் போனவாறு குறை கூறுவது கண்டிக்கத்தக்கது.

---

நாற்பது வயது என்பது
இளமையின் முதுமை
ஐம்பது வயது என்பது
முதுமையின் இளமை.
— விக்டர் ஹியூகோ
— பூண்டி

அருள் வாக்கு

# ஒரு வள்ளலும் ஒரு நாணய சாலையும்

ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ சங்கராசார்ய ஸ்வாமிகள்



சில ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீகாஞ்சிப் பெரியவர்களின் முன் நடைபெற்ற நிகழ்ச்சி. 'கல்கி' பொங்கல் இதழ் அருள்வாக்கில் தைப் பூசம் பற்றிச் சொல்கையில் ராமலிங்க ஸ்வாமிகளை ஸ்ரீபெரியவர்கள் குறிப்பிட்டிருப்பதால் அந்த நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது.

பெரியவர்களைப் பணிய வரும் பக்தர் ஒவ்வொருவரும் தம்மை' அறிமுகம் செய்து கொள்கையில், ஓர் இளைஞர், "சென்னை வள்ளலார் நகரிலிருந்து வருகிறேன்" என்கிறார்.

"வள்ளலார் நகரா?"

"ஆமாம். தங்க சாலைக்குத்தான் அப்படிப் பெயர் மாற்றியிருக்கிறது."

பெரியவர்களின் இதழ்க் கடையில் நகை நெளிகிறது: கண்கள் ஒளி விடுகின்றன. "வள்ளல் என்றால் பணத்தை வாரிக் கொடுக்க வேண்டும். பணம் அச்சுப் போட்ட சாலை இப்போது வள்ளலாரின் ஊராகி விட்டது" என்கிறார். "தங்கசாலை என்றாயே, அப்படியென்றால் பணம் அச்சுப் போடுகிற இடம் என்று தெரியுமோ?" என்று அந்த அடியாரைக் கேட்கிறார்.

"தெரியாது" என்கிறார் இளைஞர்.

"தங்கத்தினாலே ரோட் போட்டிருந்தது — (அதனால்தான் தங்கசாலை) என்று நினைத்தாயோ?" என்று இனிய குறும்பாகக் கேட்கிறார்.

"ஸ்வாமிகள் சொல்லி இப்போதுதான் தங்கக்காசு தயாரித்த இடம் தங்கசாலை என்று தெரிகிறது" என்று அந்த இளைஞர் சொல்கிறார்.

"அதுவும் தப்பு. 'தங்கசாலை' என்பதே தப்பு" என்று சிரிக்கிறார் பெரியவர்.

அருமையான விஷயம் வரப்போகிறது என்று அடியார்கள் ஆர்வம் கொள்கின்றனர். அருமையை அவ்வளவு இலேசில் தந்து விடுவாரா ஸ்வாமிகள்? தொடர்பேயில்லாதது போல் வேறேதோ விஷயத்துக்குப் போய் விடுகிறார்.

"ஸப்த விடங்க ஸ்தலம் என்று கேள்விப் பட்டிருக்கிறாயோ?" என்று இளைஞரை வினவுகிறார்.

"இல்லை."

"இங்கே வேறே யாராவது கேள்விப்பட்டிருக்கிறீர்களா?"

பலர் கேள்விப்பட்டதாகச் சொல்கிறோம். ஆனால் அவற்றின் பெயர்களை ஸ்வாமிகள் கேட்டபோது அநேகமாக எவருக்குமே திருவாரூர் தவிர மற்ற ஆறு விடங்க ஸ்தலங்களின் பெயர் தெரியவில்லை.

பெரியவர்களே சொல்கிறார்கள்: "திருவாரூரில் வீதி விடங்கர். இவர் சுவாஸ ரூபமான அஜபா நடனம் ஆடினவர். திருநள்ளாற்றில் நாக விடங்கர்; திடு திடு என்று உன்மத்த நடனம் ஆடினவர். நாகைப்பட்டினம் என்கிற திரு நாகைக் காரோணத்தில் சுந்தர விடங்கர். சமுத்திரத்தில் அலை அடிப்பது போல் இவர் ஆடினதை 'பாராவார தரங்க நடனம்" என்பார்கள். திருக்காறாயில் க்ஷேத்திரத்தில் ஆதிவிடங்கர். இவர் கோழி தத்தித் தத்திப் போகிற மாதிரி ஆடினார். 'குக்குட நடனம்' என்பார்கள். திருக்கோளிலி (திருக்குவளை என வழங்குவது) யில் அவனி விடங்கர். வண்டு சுற்றுகிறது போல பிருங்க நடனம் பண்ணுகிறார். திருவாய்மூரில் நீலவிடங்கர். அவர் கமல நடனம் என்பதைச் செய்கிறார். அலைகளில் தாமரைப் பூ ஆடுவதைப் போல் நாட்டியம் பண்ணியிருப்பார் போலிருக்கிறது: வேதாரண்யம் என்னும் திருமறைக்காட்டில் புவனி விடங்கர். அன்னம் சஞ்சரிப்பது போல் இவர் ஹம்ஸபாத நடனம் ஆடுகிறார்.

"நடனம் இப்படி விதவிதமாயிருந்தாலும் எல்லா மூர்த்திக்கும் விடங்கர் என்றே பெயர் இருப்பது ஏன் தெரியுமா?" என்று கேட்கிறார்.

யாருக்குத் தெரியும்? தெரியாததே நல்லதாயிற்று. ஏனெனில் அவரே விளக்க வேண்டியதாயிற்று அல்லவா?

"திருவாரூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த முசுகுந்தச் சோழச் சக்ரவர்த்தி தேவாசுர யுத்தத்தில் ஒரு சமயம் தேவேந்திரனுக்கே சகாயம் செய்தார். அதற்குப் பிரதி செய்ய நினைத்த இந்திரன் அவரிடம், 'நீங்கள் எதைக் கேட்டாலும் தருகிறேன். என்ன வேண்டும் சொல்லுங்கள்' என்றான். மஹா சிவபக்தரான முசுகுந்தர், 'நீ பூஜை செய்கிறாயே, அந்தத் தியாகராஜ விக்கிரகத்தைக் கொடு' என்று கேட்டு விட்டார்.

## மேலட்டை

இன்று—

பூச்சுமை தாங்கும்

பூவையின் தோள்கள்

நாளை—

பதருது வாழ்க்கைப்

பாரம் சுமக்கும்

வண்ணப் படம் எடுத்தவர்:
சரஸ்வதி சந்திரமூர்த்தி

''இந்திரனுக்கு அதைக் கொடுக்க மனமில்லை. ஆனாலும் கொடுத்த வார்த்தையை மீறக் கூடாதே என்பதால், 'அப்படியே தருகிறேன்' என்று சொல்லிவிட்டு, ஒரு தந்திரம் செய்தான். தேவச்சிற்பியான விச்வகர்மாவைக் கூப்பிட்டு, 'தியாகராஜாவைப் போலவே ஒரு விக்கிரஹம் செய். அது தான் என் பூஜை மூர்த்தி என்று சொல்லி முசுகுந்தருக்குக் கொடுத்து விடுகிறேன்' என்றான். ராஜ ஆக்ஞை என்பதால் விச்வகர்மாவும் அவ்வாறே செய்தான்.

''முசுகுந்தர் விக்கிரகத்தை வாங்கிக் கொண்டு பூலோகத்துக்கு வந்தார். பரமேச்வரன் அவருக்கு உண்மையைத் தெரியப்படுத்தி விட்டார். முசுகுந்தர் அந்த விக்ரஹத்தை இப்போது சப்தவிடங்க ஸ்தலமாகி விட்ட ஒன்றில் பிரதிஷ்டை செய்துவிட்டு இந்திரனிடம் போனார்.

''இந்திரன் 'இப்போதும் முன் போலவே விச்வ கர்மாவைக் கொண்டு இன்னொரு விக்கிரஹம் செய்து அதைத்தான் கொடுத்து ஏமாற்றினான்.

''ஈச்வரனும் நன்றாக விளையாடினார்; முன்போலவே முசுகுந்தர் திருவாரூருக்குத் திரும்பி வந்தபின் அவருக்கு உண்மை தெரியுமாறு செய்தார். முசுகுந்தர் இந்த விக்கிரஹத்தையும் பிற்பாடு விடங்க க்ஷேத்திரமாகப் போகும் இன்னொரு ஸ்தலத்தில் பிரதிஷ்டை செய்துவிட்டு மறுபடியும் தேவலோகம் போனார்.

''இப்படியே ஆறுமுறை இந்திரன் ஏமாற்றினான். ஏழாம் முறை தியாகராஜாவே முசுகுந்தரோடு புறப்பட்டு வந்துவிட்டார். பறந்தே வந்து விட்டார்; தியாகராஜா பிம்பத்தில் இறக்கையிருக்கிறது - என்று சொல்வதுண்டு. முசுகுந்தர் ஏழு விக்கிரஹத்தையும் ஒரே இடத்தில் சேர்த்து வைத்ததாகவும் 'அசல் தியாகராஜரானால் அதற்கு அர்ச்சனை செய்த செங்கழுநீர்ப்பூ வாடாது; இதைக் கொண்டு நிஜமான மூர்த்தி எது என்று பரிசோதித்துப் பார்த்துக் கொள்ளு' என்று ஸ்வாமி முசுகுந்தரிடம் சொன்னதாகவும் ஒரு கதை உண்டு. நிஜத் தியாகராஜாவைத் திருவாரூரில் பிரதிஷ்டை செய்து விட்டு மற்றவற்றைச் சுற்றி ஆறு ஊரில் முசுகுந்தர் வைத்தார் என்பார்கள்,

''இப்படித்தான் ஸப்த விடங்க ஸ்தலங்கள் ஏற்பட்டன. அங்கேயெல்லாம் முசுகுந்த பூஜை, பச்சாதாபப்பட்டு மன்னிப்பு கேட்டுக் கொண்ட இந்திரன் செய்த பூஜை இரண்டும் நடக்கின்றன. எல்லா மூர்த்திக்குமே பொதுவாகத் தியாகராஜா என்ற பெயரும் இருக்கிறது.

''அதெல்லாம் சரி, இவற்றுக்கு விடங்க க்ஷேத்திரம் என்று ஏன் பெயர் வரவேண்டும்? விடங்கம் என்றால் என்ன?''

நிச்சயமாக எவருக்கும் விடை தெரிய முடியாதுதான். பெரியவர்களே விளக்குகிறார்கள்:

''டங்கம், டங்கம் என்றால் உளி என்று அர்த்தம். கற்சிலை அடிக்கிற உளி மட்டுமல்ல. தங்கத்திலும் வெள்ளியிலும் பிரதிமைகள் நகைகள் செய்ய உபயோகமாகிற கருவிக்கும் டங்கம் என்று பெயர். தேவ தச்சனான விச்வகர்மா டங்கம் முதலிய எந்தக் கருவியும் இல்லாமலே மனோசக்தியினால் எதையும் செய்துவிடுவான். அப்படித்தான் வி—டங்கமாக, அதாவது டங்கத்தின் உதவியில்லாமல் இந்த ஏழு பிம்பங்களையும் செய்திருந்தான். அதனால் மூர்த்திகளுக்கே விடங்கர் என்று பெயர் வந்து விட்டது.''

கூடியிருந்தோரிடையே ஆஹாகாரம் எழும்புகிறது.

''தங்கசாலையைப் பற்றிக் கேட்டுவிட்டு விடங்க புராணத்துக்கு ஏன் போனேன் தெரியுமா?'' என்று ஆவலைக் கிளறுகிறார் ஸ்வாமிகள்.

''நாணயம் பண்ணுமிடத்தில் தங்கக்காசு செய்வதால் அதற்குத் தங்கச்சாலை என்று பெயர் — என்று நினைத்தால் அது தப்பு. இப்போது போல் தங்கம் அதிகவிலை விற்காத நாளில் கூடத் தங்கக் காசைவிட வெள்ளிக் காசுதான் அதிகம் போட்டிருப்பார்கள். தங்கசாலை என்பதற்குக் காரணம் வேறு. காசுகளில் சித்திரம், எழுத்து இவற்றைப் பொறிப்பதற்கும், அதன் மாற்று, எடை எல்லாம் சுத்தமாய் இருக்கிறதா என்று தட்டிப் பார்த்தே தெரிந்து கொள்வதற்கும் உபயோகமாகிற உளி போன்ற ஒரு கருவிக்கு 'டங்கம்' என்றே பெயர். காசு பண்ணும் இடங்களில் இதற்கெனவே சிப்பந்திகள் உட்கார்ந்து கொண்டு, காசுகளை டங்கத்தால் தட்டிக் கொண்டே சரி பார்ப்பார்கள். அந்த ஓசை ஜல்ஜல் என்று வெளியிலே ஓயாமல் கேட்டுக் கொண்டிருக்கும். அதனால் நாணயம் செய்யுமிடத்துக்கே 'டங்க சாலா' என்று பெயர் வந்து விட்டது. அது சம்ஸ்கிருதப் பெயர். வட தேசத்திலே கூட வழங்கும் பெயர். அதைத்தான் நாம் தங்கசாலை என்று சொல்கிறோம்; தமிழ்ப் பெயர் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம்.

''பொருள் செல்வத்தைக் கொடுத்தவர்களையே வள்ளல் என்பது வழக்கம். அருள் செல்வத்தைத் தந்தவர்களில் அருட்பா பாடினவரைத்தான் வள்ளலார் என்கிறோம். அநித்தியமான பொருளைக் குறிப்பிடும் தங்கசாலைப் பெயரும் அநித்தியமாகப் போய் விட்டது. நித்தியமான அருளைக் குறிக்கிற பெயர் அதற்கு வந்திருக்கிறது'' என்று முடித்தார் காஞ்சி முனிவர்.

— உடனிருந்து ரசித்த ஒருவர்

செங்கய லோடி விழுந்த விழிக் கொரு
சித்திரம் தீட்டுகிறாள் — சிறு
பங்கயம் என்ற முகத்தில் ஒளிக்கதிர்
பாய்ந்திட விம்முகிறாள்
மங்கலக் குங்கும ரேகையில் ஓர்விரல்
வைத்து நகர்த்துகிறாள் — கனி
பொங்கிய வாயிதழ் காட்டி எனக்கொரு
போதையை ஊட்டுகிறாள்!

வாலிபம் என்ற வலைக்குள் இழுத்தெனை
வஞ்சி நடத்துகிறாள் — திரு
ஆலிலை மீதொரு மேகலை ஆடிட
ஆடி மினுக்குகிறாள்
நூலிடை மீது குடத்தினை வைத்ததில்
நோயினை ஊற்றுகிறாள் — குணம்
நாலையும் மேடைக ளாக்கி அதிலொரு
நர்த்தன மாடுகிறாள்

அஞ்சிய பார்வையில் ஆசை வளர்த்தெனை
அஞ்சவும் சொல்லுகிறாள் — அவள்
கொஞ்சிய பாஷையில் ஓடிய வார்த்தையைக்
கூட்டியும் காட்டுகிறாள்
வஞ்சி விரித்த கரங்களிலே எனை
வாவெனக் கெஞ்சுகிறாள் — மித
மிஞ்சிய போதையில் கண்கள் சிவந்திட
வேதனை கொள்ளுகிறாள்

இத்தனையும் அவள் செய்தது போல்மனம்
எண்ணி மயங்குகிறேன் — அதில்
எத்தனை கற்பனை எத்தனை கற்பனை
ஏங்கி உறங்குகிறேன்
தத்துவ மாக மலர்ந்தஎன் தோகையைச்
சந்திக்க எண்ணுகிறேன் — அந்தச்
சித்திரமோ எனை விட்டுப் பிரிந்தனள்
தேடிக் கலங்குகின்றேன்.

காதலிளங் கவி போலிதை எண்ணிக்
கனிந்திடு மானிடரே — நான்
மாதெனச் சொல்வது ஓடி மறைந்தஎன்
வாலிப நாட்களையே
ஏது திரும்பினும் என்ன நடப்பினும்
இளமை திரும்பிடுமோ — ஒரு
தேதி நடந்திட தேதி நடந்திட
திரையும் விழுந்திடுமோ

இன்னும் உடம்பில் இரத்தம் இருப்பினும்
எண்ணம் அரும்பவில்லை — அதில்
மின்னிடும் சிந்தனை ஞானமல் லால்சுக
வேதனை ஏதுமில்லை
மன்னிய பக்குவம் எய்திய நாட்களை
வாழ்வில் அடைந்துவிட்டேன் — இனி
தன்னந் தனிமையில் தவம்புரி வோமெனக்
கதவினைச் சாத்திவிட்டேன்.



# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

## ஜெயகாந்தன்

### 3. இனியும் இந்த வீட்டிலா?

**ப**த்து வயதுச் சிறுவன் சிங்காரம் எல்லாவற்றையும் ஒரு விளையாட்டாகவும், தன்னை எல்லாருக்கும் முன்நிறுத்திக் கௌரவம் செய்கிறதைப் பெருமிதமாகவும் கருதிச் சிரித்துக் கொண்டே தகப்பனுக்கு இறுதிக் கடன்களை நிறைவேற்றினான். மரணம், பிரிவு, இழப்பு என்கிற வார்த்தைகளின் பொருள் தெரியாத உல்லாசமான அவனது கலை உள்ளம் இழவுச் சடங்குகளிலும் ஏதேதோ ரசனை கண்டு கொண்டிருந்தது.

மற்றவர்கள் அழும்போது இந்த ஓலம் எப்போது ஓயும் என்று கருங்கிய முகத்துடன் கண்களை இடுக்கிக் கொண்டு அவன் காத்திருந்தான்; அல்லது அந்த இடத்தை விட்டு வேறு எங்காவது ஓடிப் போய்த் தனது விளையாட்டில் மூழ்கினான்.

மகுடேசன் பிள்ளை தமது கடைசிக் காலத்தில் இரண்டாம் கல்யாணம் செய்து கொண்டு அந்த இருபது வயதுகூட நிரம்பாத கோதையை விதவையாக்கி விட்டுப் போனதை ஒரு கொடுமையான சோகமாக யாரும் கருதியதாகத் தெரியவில்லை. எங்கோ, யார் வீட்டிலோ, ஆதரிப்பாரில்லாத அநாதையாக, மாட்டுத் தொழுவம் கூட்டிக் கொண்டிருந்த இந்தக் கோதைக்கு வந்த அதிர்ஷ்டத்தைக் கண்டு பெருமூச்சு விடுகிற — மகுடேசன் பிள்ளையின் சொத்தில் சமபங்கு உடையவளாகப் பெரும் பணக்காரியாகி விட்டாளே என்று மனம் காய்கிற பொருமை உணர்ச்சிதான் அந்தக் குடும்பத்திலும், உறவினர்களிடையேயும், சாதியிலும் மேலோங்கி நின்றது.

அவர் உயிர் பிரிந்த வினாடியிலேயே மீண்டும் தான் ஓர் அநாதையாகி விட்ட உணர்ச்சியில், நிராதரவான வெறுமையில் யாருடனும் பேசாத மௌனத்தில், தானும் அவரும் அந்தரங்கமாய்ச் சில இரவுகளைக் கழித்த அந்தத் தனி அறையின் இருட்டில் கலந்திருந்தாள் கோதை.

என்னென்னவோ நடந்தது. யார் யாரோ வந்தார்கள். மகுடேசன் பிள்ளையைப் பற்றிப் புகழ்ந்தார்கள்; புலம்பினார்கள்; அவருக்குப் பூசையிட்டார்கள்; அவர் பேரால் விருந்து படைத்தார்கள்; எல்லோரும் ஒவ்வொரு நாள் ஒவ்வொரு அவரைப் பற்றிய நினைவிருந்து நீங்கியது போலவே கும்பலாய்க் கரைந்தார்கள். இந்த வீட்டைச் சேர்ந்தவர்கள் தவிர வந்திருந்த விருந்தாளிகள் அனைவரும் போய் விட்டார்கள்.

வீடு சூன்யமாயிருந்தது. வழக்கம் போல் அந்த வீட்டுப் பெண் மக்கள் மூன்றும் கட்டில் தங்கள் மகாசபையைக் கூட்டினார்கள். மகுடேசன் பிள்ளையின் மரணத்துக்காகத் துக்கம் கொண்டாடிய இத்தனை நாளும் சாஸ்திர சம்பிரதாயங்களுக்குப் பயந்து, வெள்ளையம்மாளை வரவழைக்காமல் இருந்தனர். இத்தனை நாள் 'விரதம்' காத்த வெறுப்புத் தீரும் என்கிற மாதிரி இன்றைக்கு அசைவ விருந்துக்கு ஏற்பாடாகிறது...

வெள்ளையம்மாள் கூடை நிறைய கொண்டு வந்த பெரிதும் சிறிதுமான ஒளியும் நிறங்களும் மின்னுகின்ற மீன்வகைகளைத் தோட்டத்து முருங்கை மரத்தின் கீழ், துணி துவைக்கும் கல் மறைவில் உயிர் துடித்துத் துள்ளிச் சிதறக் கொட்டி ஆய்ந்து கொண்டிருக்கிறாள். சிங்கு அந்தத் துணி துவைக்கும் கல்லின் மீது ஏறிக் குத்துக் காலிட்டு உட்கார்ந்து மீனின் அழகையும், வெள்ளையம்மாளின் கைகளில் அடர்த்தியாய் நிறைந்திருக்கும் பச்சைக் குத்திய கோலத்தையும், அவள் விரல்கள் மீனை ஆய்கிற நேர்த்தியையும் ரசித்துக் கொண்டிருக்கிறான்.

''பரட் - பரட்'' என்று மீனின் செதிள்களை அரிவாள் மனையின் உலோக சத்தத்துடன் வெள்ளையம்மாள் செதுக்குகிறாள்... ரத்தமும் நிணமும் உள்ள மீனின் வயிற்றைக் கீறி, விரலைக் கொக்கி போலாக்கி உள்நுழைத்துக் குடலை உருவுகிறாள்.

''அடியே... மங்களம்... புளி ஊரப் போடு... இனிமே நீ இங்கேதான் இருக்கப் போறே — தெரிஞ்சுக்கோ... பெரியசாமி அண்ணுத்தை ஓட்டோட வந்துடும்...அப்பா தான் போயிச் சேர்ந்தாரே.. அத்தோட அந்த விரோதமும் போச்சுன்னு விட வேண்டியது தான்... விருந்தாளி வந்த மாதிரி ஒதுங்கி ஒதுங்கி நிக்காதே! போயி வேலைகளைப் பாரு!'' என்று அவளை அரவணைத்த மாதிரி, சமையலறைச் செக்கின் நுகத்தடியை இழுத்து மங்களத்தின் கழுத்தில் கமத்தினாள் காந்திமதி.

பொன்னம்மாளின் மாமியார் சிவபாக்கியத்தம்மாள், மருதேசன் பிள்ளையின் மறைவுக்குப்பிறகு மருமகளை அதிகம் கட்டுத்திட்டம் செய்யாமல் இங்கேயே இருக்கட்டும் என்று விட்டுவிட்டுத் தான் மட்டும் எதிர் வீட்டுக்குப் போய் விட்டாள்.

இப்போது கொஞ்ச நாட்களாய் அவள் தனக்குத் தனிச் சமையல் வைத்துக் கொண்டாள். பொன்னம்மாளோ மற்றவர்களோ தீண்டிய பாத்திரத்தைக் கூடத் தண்ணீர் தெளிக்காமல் தீண்டமாட்டாள். ரொம்ப 'மடி'யாகி விட்டாள். தலையை வேறு மழித்துக் கொண்டு, நார்மடிப் புடவையும் கட்டிக் கொண்டு அவள் பாப்பாத்தியம்மாள் வேஷம் போடுவது இந்த வீட்டுப் பெண்களுக்குப் பற்றிக் கொண்டு வருகிறது. அது குறித்து என்னவோ சொல்லி அறைக்குள் பெரிய குரலில் சிரித்துக் கொண்டிருந்தார்கள் பொன்னம்மாளும் ராணியும்.

''எலும்பையும் முள்ளையும் தள்ளி எல்லாம் தின்னவதான் இந்த அவ்வையாக் கிழவி – இப்ப பெரிசா ஸைவம் கொழிக்கரு...'' என்று அவள் சொல்லிக் கொண்டிருந்த வாசகங்கள் மட்டும் அங்கே வந்த கோதையின் காதில் விழுந்தன.

சம்பந்தியம்மாளுக்கு 'அவ்வையாரம்மா' என்ற கேலிப் பெயர் உண்டு என்று கோதைக்குத் தெரியும். அந்த வீட்டில் எல்லோருக்கும் ஒரு 'மறுபெயர்' வைப்பது இந்தப் பெண்கள் மகாசபையின் மரபு என்றும் அவள் அறிந்திருந்தாள்.

மருதேசன் பிள்ளைக்கு-'கண்ணப்ப நாயனார்' என்று பெயர்; கோபத்தில் ஒருமுறை அவரது மகள் ராணி, அவரை நொள்ளையப்பர் என்று சொல்லித் தான் தனது புருஷனுக்குப் பரிந்து கொண்டு அவளைக் கண்டித்த நிகழ்ச்சி நினைவுக்கு வந்தது அவளுக்கு. மருதேசன் பிள்ளைக்குக் கொஞ்சம் மாறுகண் உண்டு.

தனக்கு இந்தப் பெண்கள் ஏதேனும் கேலிப் பெயர் வைத்திருப்பார்கள் என்று நினைத்த கோதை 'என்ன பெயர் வைத்திருப்பார்கள்?' என்று கற்பனை செய்தாள். இந்தப் பெண்களின் பொல்லாத்தனம்!—பெற்ற தாய் அம்பிகைக்கே 'ஆலவாய் அழகி' என்று பெயர். அந்த அம்மாளுக்கு வாய் கொஞ்சம் கோணலாம்!

மூலையிலிருந்த பழங்காலப் பானையடுக்கிலிருந்து புளி எடுத்துக் கொண்டிருந்த மங்களம் பின்கட்டுக்கு வரும் கோதையைப் பார்த்தாள்.

''மாமி... மாமி'' என்று ரகசியக் குரலில் தன்னை மங்களம் அழைக்கிற குரல் மட்டும் கேட்டு நின்று சுற்றிலும் பார்த்தாள் கோதை. மங்களம் இருட்டு அறையிலிருந்து வெளியே வந்து கோதையிடம் நெருங்கி ''மறுபடியும் இந்த நரகத்திலே வந்து இருக்கணும்னு பெரிய அத்தாச்சி சொல்லுது மாமி... ''

அவளது புகாரையும் புலம்பலையும் பார்த்து உறுமுவது போல் தோட்டத்துப் பக்கம் அந்த ஒரு கண்ணில்லாத பூனை. மீனுக்காக உரத்த குரலில் தொடர்ந்து இடை விடாமல் கத்திக் கொண்டிருந்தது. கோதை அதைக் கவனிப்பதைக் கண்ட மங்களம் தலையில் அடித்துக்கொண்டு சொன்னாள்: ''மாமாவும் இல்லாத தினலே இவங்க அடிக்கிற கொட்டத்தை இனிமே நம்மாலே தாங்க முடியாது... பாரேன், அங்கே செம்படவக் குப்பம் மாதிரி நாத்தம்





''சமீபத்தில் ஒரு திருடனை பம்பாய் போலீஸார் பிடித்தது கவையான நிகழ்ச்சி. ஒரு வீட்டில் புகுந்து சில பொருட்களை அந்த ஆள் திருடினான். அதில் ஒரு டிரான்ஸிஸ்டரும் இருந்தது. சாலையில் போய்க் கொண்டிருக்கும்போது ஒரு போலீஸ் அதிகாரி அவனிடம் ஸ்கோர் கேட்டார். டிரான்ஸிஸ்டரை இயக்கத் தெரியாமல் அவன் விழித்தான். சந்தேகமடைந்த போலீஸ் அதிகாரி அவனைக் காவல் நிலையத்திற்கு அழைத்துச் சென்று விசாரணை செய்தார். அவனும் தன் குற்றத்தை ஒப்புக் கொண்டான்.''

— டைம்ஸ் ஆஃப் இந்தியா
- ராஜன் ஆனந்த்

அடிக்குது... இதுக்கு நான் புளி கரைக்கணும், மொளகா அரைக்கணும்... மாமி நீ ஒரே வார்த்தையிலே சொல்லிடு — அவங்க அப்பா விருப்பப்படி பெரியவரு தனியாத் தானிருக்கணும்னு.. பழனியாண்டவர் கோயிலு வூடு தனியா எங்கேயோ காட்டிலே இருக்கிற மாதிரி இருந்தாலும் எனக்கு நிம்மதியா இருக்குது... இது பிசாசுகள் இருக்கிற வீடு; இங்கே இருந்தா என்னை இவங்க படுத்தற பாடு தாங்க முடியாது மாமி'' என்று கண்ணீர் வடித்தாள்...

இன்னும் சில மாதங்களில் இவளுக்கு ஒரு குழந்தை பிறக்கும் என்று அவள் தோற்றத்தை அளந்து பார்த்து மனத்துள் சொல்லிக் கொண்டாள் கோதை.

''அது எப்படி மங்களம் வீட்டுக்கு மூத்த பிள்ளையை இங்கே வராதே தனியாப் போன்னு நான் சொல்ல முடியும்? அப்பா கோபமெல்லாம் அப்பாவோட போக வேண்டியதுதானே?'' என்று அவளுக்குப் பதில் சொல்லிக்கொண்டே கையிலிருந்த சாவிக் கொத்தைச் சுழற்றியவாறு மங்களத்தின் கஷ்டத்தைப் பற்றி யோசித்தாள்...

தோட்டத்து வாசல் வழியே — மருதேசன் பிள்ளை நாள் முழுதும் கழிக்கிற தோப்பும் அதன் நடுவே அந்தக் கொட்டகையும் தெரிந்தன. விளக்குச் சாமியார் வீட்டுக்குப் பின்னால் தோப்புக்கும் தோட்டத்து வாசலுக்கும் இடையே ஓடும் வாய்க்காலில் நின்று இரு கைகளாலும் தண்ணீரை வாரி மேல் கழுவிக் கொண்டிருந்தார்.

விளக்குச் சாமியார் தன் புருஷனுக்கு எப்படிப்பட்ட அந்தரங்க ஆலோசகராயிருந்தார் என்பதை நினைத்துப் பார்த்தாள் கோதை. அவர் மாதிரியே இந்த வீட்டில், தானும் ஓர் அநாதை என்று அவளுக்குத் தோன்றியது. அவருக்கு இந்த ஊரிலும் இந்தக் குடும்பத்திலும் ஏற்பட்ட பிடிப்புக்குக் காரணமான மருதேசன் பிள்ளையே போய் விட்டார். தனக்குப் பிறகு இந்தச் சாமியார் தன் குடும்பத்துக்குத் துணையாக இருக்க வேண்டும் என்று அந்த உயிலின் மூலம் இவரைக் கட்டிப் போட்டுவிட்டு அவர் போய் விட்டார்... அந்த உயிலில் தனக்கு இவ்வளவு பெரிய செல்வத்தை அவர் ஒதுக்கிவிட்டுப் போயிருப்பதை வைத்துக் கொண்டு எதிர்காலத்தில் தான் என்னசெய்வது என்று அவள் மலைத்தாள்...

கோதைக்குத் திடீரென்று நெஞ்சைப் பிறிக் கொண்டு அழுகை வந்தது. அந்தப் பூனையின் அலறலும், தோட்டத்துப் பக்கத்திலிருந்து வீசிய வாடையும் அவளை அங்கு நிற்கவிடாமல் துரத்தின.

சிங்காரத்தைக் கூப்பிட்டுத் தன்னோடு இழுத்துக் கொண்டு முன் கட்டுக்குப் போய் விடலாமா என்று முதலில் நினைத்த கோதை — 'அவனுக்குத்தான் அதில் விருப்பமாச்சே' என்று எண்ணிக்கொண்டே அவனைக் கூப்பிட்டாள்: ''சிலுக்குக் கண்ணு''

''என்ன சின்னம்மா?'' என்று அங்கிருந்தே அவன் குரல் கொடுத்ததைக் கேட்டு ''விளக்கு வைக்கிற நாழியாச்சு — முன் கூடத்திலே வந்து படிக்கணும்'' என்று நினைவு படுத்தி விட்டுப் போனாள்.

சிங்காரத்துக்குக் கோதையைச் சின்னம்மா என்று கூப்பிடச் சொல்லிக் கொடுத்தாள் காந்திமதி: ''அப்படித்தான் நம்ப ஜாதியிலே பழக்கம்...'' என்று அவன் சின்னம்மா என்று இப்போது சொன்னதைக் கேட்டுத் திருப்திப்பட்டுக் கொண்டாள்.

மீன் ஆய்ந்து கொண்டிருந்த வெள்ளையம்மாள் தன்னையே பார்த்துக் கொண்டிருக்கும் சிலுக்குவைப் பார்த்து ''நீ எங்க வூட்டுக்கு வந்துடு. உனக்கு வகை வகையா மீன் ஆக்கிப் போடறேன். எங்க வூட்டுலே ஒரு பொண்ணு இருக்கு; அழகா உங்க ஜாதிப் பொண்ணு மாதிரி இருப்பா. அவளைக் கட்டிக்கிட்டு இருந்துடு... வரியா?'' என்று பரிகாசம் பண்ணினாள்.

அவள் இழுத்து இழுத்துப் பேசுகிற 'அக்கரை பாஷை' சிலுக்குவுக்கு ரசமாக இருந்தது... கரிய வதனத்தில் வெள்ளை விழிகள் விரிய, பற்கள் பளிச்சிடச் சிரித்தாள்.

கோதையின் கையில் சாவிக் கொத்துச் சுழன்று கொண்டிருந்தது. அவளது கண்களும் முகமும் மூக்குநுனியும் சிவந்திருந்தன. அவளது துயரம் அழுது தீரக் கூடியதாயில்லை. இந்த இளம் பருவத்தில் இவ்வளவு அன்பும் உயர் பண்புகளும் உடைய ஒருவருக்கு வாழ்க்கைப்பட்டு ஆறு மாதத்தில் விதவையாகி விட்ட வருத்தம் மட்டும் அல்ல அது.

அவரது அவநம்பிக்கைக்கு அநியாயமாகத் தான் ஆளாகிவிட்ட — அந்த அபவாதத்தைப் போக்குவதற்குள் அவரைப் பிரிய நேர்ந்து

விட்ட கொடுமையை எப்படிக் கண்ணீர் சிந்திக் கரைத்துவிட முடியும்?

அவருடைய செல்லப் புத்திரன் சிங்காரத்துக்கும் மீன் சாப்பிடும் பழக்கத்தை ஏற்படுத்திவிட்டவள் அவள்தான் என்று அவர் தீர்மானித்து விட்டதை இவள் மாற்றி, அந்தக் குற்றத்தைச் செய்தவர்களை அவரிடம் காட்டிக் கொடுத்திருக்கலாம்; அவ்வாறு செய்திருந்தால், இந்தக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்களின் வெறுப்புக்கும் பகைமைக்கும் ஆளாகியிருப்பாள்... அந்தப் பயத்தினால் அந்தப் பழியை அவள் ஏற்றுக் கொண்டாள். அவரது நம்பிக்கை இந்த அற்ப விஷயத்தில் இந்த அளவு முற்றாகவே சிதறிப் போகக்கூடும் என்று அவள் அப்போது நினைக்கவில்லை... இப்போது அவரே போய்விட்டார்!

இப்போது — இனிமேல் என்ன செய்யலாம்? இந்தப் பெண்களோடு ஒத்து வாழ முடியுமா? மங்களத்தின் நிலைமைதான் வரும்! பெரிய சாமியும் இந்த வீட்டோடு வந்து விட்டால் தானும் சிங்காரமும் தனியாகப் போய் விட வேண்டும் என்கிற யோசனை உதித்தது அவளுக்கு. அவள் பங்கில் அடுத்த தெருவில் ஒரு பெரிய வீடு இருக்கிறது. தனியாகப் போய் விட்டால் தான் தனக்கு மரியாதை என்று நினைத்தாள் கோதை.

அது குறித்து அவளுக்கு எல்லோரிடமும் யோசனை கேட்டுவிட வேண்டும் என்று தோன்றியது.

அப்போது விளக்குச் சாமியார் தெருக் கோடியிலிருந்த கம்பத்தில் விளக்குப் பொருத்தி விட்டுத் தோளில் ஏணியுடன் வந்து கொண்டிருந்தார்.

(தொடரும்)

## மார்கழி



ஒரு மாமியார் எழுதிய கவிதை:

எனது மருமகள் ஆர்வத்தோடு
கோலம் போடக் கற்றுக் கொண்டு
மாக்கிண்ணத்தோடு வீதிக்கு வந்ததும்
மார்கழி மாதம் முடிந்து விட்டதே!

— வே. குணசேகரன்



## மாப்பிள்ளை முறுக்கு

நாடகம் முடிந்த பிறகு, அதில் நடித்துள்ள சுந்தரி பாய் அவர்களைச் சந்தித்தேன். "நாடகம் பேஷாக இருந்தது; மிக நன்றாக நடித்தீர்கள்" என்றேன்.

"எல்லாத்துக்கும் மௌலி ஸாருடைய வசனம்தான் காரணம். அதிலே ஜீவன் இருக்கிறது. நாடகமும் உயிரோட்டமுள்ளதாகி விட்டது" என்றார்.

நூற்றுக்கு நூறு உண்மை. மௌலியின் நாடகங்களில் சிக்கலான கதை அமைப்போ திடீர்த் திருப்பங்களையோ எதிர்பாராத முடிவையோ யாரும் எதிர்பார்ப்பதில்லை. அன்றாட வாழ்க்கையில் நாம் காணும் சராசரி மனிதர்களின் இயல்பான உரையாடலே நாடகத்தின் பிரதான அம்சமாகி விடுகிறது. ஒரு சின்ன மையக் கருத்து சங்கிலியாகப் பல்வேறு குணசித்திரங்களை இணைக்க உதவுகிறது.

வசனத்தின் இயற்கையான நகைச்சுவை காரணமாக நடிகர்களும் அளவு மீறாமல் அடக்கமாக நடிக்கிறார்கள். அனைவரும் பாராட்டுப் பெறுகிறார்கள். அவர்களிலும் முதலிடம் பெறுபவர் எஸ். ஆர். கிருஷ்ணசாமி (சிவராமன் பாத்திரம்).

மௌலியின் டைரக்ஷனில் மாலியின் தயாரிப்பாக அரங்கேறி வருகிற நாடக மித்ராவின் மாப்பிள்ளை முறுக்கு நாடகத்தைக் காணச் செல்பவர்கள் சிரிப்பதில்லை என்று முறுக்கேற்றிக் கொண்டு அமர்ந்தாலும் கூட, நாலு காட்சிகள் முடிவதற்குள்ளே முறுக்குத் தளர்ந்து விடுவார்கள். வேறென்ன சொல்ல?

— குட்டி கிருஷ்ணன்

# பிளாக் மெயில்..



ராஜு அவரை ஏற இறங்கப் பார்த்தான். அவருக்கு நிச்சயமாக ஐம்பது வயதுக்கும் ஒன்றிரண்டு அதிகமாகவே இருக்கும். முன் தலையில் வழுக்கை. சற்றே உள்ளடங்கிய கண்கள். புறங்கைகளில் கொஞ்சம் கருக்கம். முழுக்கை ஸில்க் சட்டையும் எட்டு முழவேட்டியும் அணிந்திருந்தார். இந்தக் காலத்தில் கூட ஸில்க் சட்டை அணிகிறார்களா என்று ராஜு நினைத்துக் கொண்டான்.

"மிஸ்டர் ராஜு! என்னிடம் நிறைய பணம் இருக்கிறது. ஆனால் மனநிம்மதி இல்லை" என்று அவர் ஆரம்பித்தார்.

"நீங்கள் இடம் மாறி வந்து விட்டீர்கள் என்று நினைக்கிறேன்" என்றான் ராஜு.

"இல்லை. இல்லை. சரியான இடத்துக்குத் தான் வந்திருக்கிறேன்... நான் இன்னும் என் பிரச்னையை உங்களிடம் சொல்ல ஆரம்பிக்கவில்லையே — எப்படித் தொடங்குவது என்று புரியவில்லை."

"உங்கள் பிரச்னையின் ஆரம்பம் எங்கேயோ அங்கே தொடங்குங்கள்."

"ஆரம்பம் என் திருமணத்துக்கு ஒரு வருடம் கழித்து. அப்போதுதானே என் மகன் பிறந்தான்?" என்று கூறி அவர் சிரித்தார்.

"உங்களுக்கும் உங்கள் மகனுக்கும் ஏதாவது தகராறு?"

"அந்த மாதிரிதான். எனக்கு அந்தஸ்து, கௌரவம் இதெல்லாம் ரொம்ப முக்கியம்."

"உங்கள் பிள்ளையால் அதெல்லாம் குலைகிறமாதிரி தோன்றுகிறது. அதுதானே?"

"ஊம்... ஆமாம்."

'இவர் ஏன் தயங்குகிறார்? இதைத் தவிர வேறு ஏதோ விஷயம் இருக்க வேண்டும்' என்று ராஜு தன் மனத்துக்குள் குறித்துக் கொண்டான்.

அவர் தொடர்ந்தார். "ஆமாம். என் பிள்ளை செந்தில் என்னுடைய ஸ்டெனோவைத் தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பிடிவாதம் பிடிக்கிறான். நான் ஒரு நல்ல இடத்தில் அவனுக்குப் பெண் பார்த்து வைத்திருக்கிறேன். போன வாரம் எங்களுக்குள் ஒரு பெரிய வாக்குவாதமே நிகழ்ந்தது. ஆனால் அவன் என் வழிக்கு வர மறுக்கிறான்."

"இதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று ராஜு புரியாமல் கேட்டான்.

"என் மகனை எப்படியாவது என்னிடமிருந்து கொஞ்ச நாள் பிரித்து வையுங்கள். என் பொருட்டு அவனுக்கு எந்தத் தீங்கும் நேர்வதை என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது."

"மிஸ்டர் செல்வ கணேசன்! நீங்கள் ஆரம்பத்தில் என்னிடம் சொல்ல எண்ணியிருந்தது இது இல்லை என்று நினைக்கிறேன்."

"எப்படிச் சொல்கிறீர்கள்?"

"உங்கள் மகனை உங்களிடமிருந்து — அதுவும் சில நாட்களே — பிரிக்க வேண்டுமானால் அவனை நீங்கள் உல்லாசப் பயணம் அனுப்பலாம். அல்லது உங்கள் அலுவலக வேலையாக எங்காவது அனுப்பலாம். நீங்கள் இங்கே வந்தது நிச்சயமாக இதற்கல்ல. வக்கீலிடமும் டாக்டரிடமும் மட்டுமல்ல, ஒரு டிடெக்டிவ்விடமும் உண்மையை மறைக்கக் கூடாது. சொல்லுங்கள்."

அவர் கொஞ்சம் சிந்தித்து விட்டுச் சொன்னார். "நீங்கள் சொல்வது வாஸ்தவம்தான். நான் இதற்காக வரவில்லை. ஆனால் இதுவும் ஒரு பிரச்னைதான்... மிஸ்டர் ராஜு, என்னை ஒருவன் பிளாக் மெயில் செய்கிறான்."

'அப்படி வாருங்கள் வழிக்கு' என்கிறமாதிரி ராஜு தலையசைத்தான். "யார் அவன்?"

"என் தோட்டக்காரன்."

"எதற்காக? என்ன வேண்டுமாம் அவனுக்கு?"

"இதுவரை அவனுக்கு ரூபாய் இருபதாயிரம் அழுது விட்டேன் — மூன்று நாட்களுக்கு ஒருமுறை பத்தாயிரம் ரூபாய் என்ற கணக்கில். திரும்பவும் நாளை இன்னொரு பத்தாயிரம் தர வேண்டும்."

"அவனைப் பற்றிச் சொல்லுங்கள்."

"அவன் பெயர் கங்காதரன். எங்கள் பங்களா காம்பவுண்டுக்குள்ளேயே இருக்கும் ஸெர்வண்ட் குவார்ட்டர்ஸ் ஒன்றில் தங்கியிருக்கிறான்."



## பரணி

''எப்போதிலிருந்து?''

''குமார் மூன்று மாதங்களுக்கு முன்பிலிருந்து — அப்போதுதான் அவன் வேலையில் சேர்ந்தான். தன் ஒரே பெண்ணோடு தங்கியிருக்கிறான்.''

''பிளாக் மெயில் எதற்காக என்று கேட்டேன். நீங்கள் பதில் சொல்லவில்லை.''

''... ... அவன் பெண், கமலா என்று பெயர், அவளை... என் குடும்பத்தில் ஒருத்தியாகச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்கிறான்.''

அவனுக்கு இப்போது எல்லாமே — அவர் தம் பிள்ளையை எங்காவது அனுப்ப விரும்புவதிலிருந்து. எல்லாமே — புரிந்த மாதிரி இருந்தது. வழக்கமான கதைதான் என்று நினைத்துக் கொண்டான்.

அவர் முகம் வெளுக்கப் பேச்சை நிறுத்திக் கொண்டார். புறங்கழுத்தையும் முகத்தையும் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டார். தவிப்புடன், செய்வதறியாது, சட்டைக் கையின் கஃப் லிங்கைத் திருகிவிட்டுக் கொண்டார்.

''உங்கள் கஃப்லிங்க் நன்றாக இருக்கிறது.'' என்றான் ராஜு நிதானமாக.

அவர் கொஞ்சம் தயக்கத்துடன் சிரித்தார். ''இதற்கு முன் சிவப்புக் கல் பதித்த கஃப் லிங்க்ஸ் வைத்திருந்தேன். அவை மிக நன்றாக இருக்கும். இருட்டில் கூட அந்தக் கற்கள் பளீரென்று மின்னும். போன வாரம் அவற்றை எங்கோ தொலைத்து விட்டேன்.''

அவன் அவர் தொலைத்த கஃப் லிங்க்ஸில் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. யோசித்தான். பணக்காரக் குடும்பம். வறுமை தெரியாத வாலிபப் பிள்ளை. ஒருபக்கம் காதலுக்கு அப்பாவின் ஸ்டேனோ. இன்னொரு பக்கம் தற்காலிக உறவுக்குத் தோட்டக்காரப் பெண் கமலாவாக்கும்? ''கமலா என்கிறீர்களே, ஏதாவது எக்கச்சக்கமான புகைப் படங்கள் இருக்கின்றனவா?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை.''

''கடிதங்கள்?''

''ஊகூம்.''

''என்ன குழப்பம் இது? புகைப்படம் இல்லை, கடிதம் இல்லை, பிளாக் மெயில் மட்டும் இருக்கிறதென்கிறீர்கள். தோட்டக்காரனைத் துரத்த வேண்டுமென்று சொன்னாலாவது அர்த்தமுண்டு; பிள்ளையைத் துரத்த வேண்டுமென்கிறீர்கள். எனக்குப் புரியவில்லை. நான் ஒன்று செய்கிறேன். உங்கள் பிள்ளையை இங்கே அனுப்பி வையுங்கள். நான் அவனிடம் பேசிப் பார்க்கிறேன். பின் உங்கள் தோட்டக்காரனை... இல்லை, நானே இப்போது உங்களோடு உங்கள் பங்களாவுக்கு வருகிறேன். அவர்கள் இருவரோடும் பேசினால் என்ன செய்ய வேண்டுமென்று எனக்குப் புரியலாம்.''

செந்தில் அழகாக இருந்தான். சிவப்பாக இருந்தான். நேர்த்தியாக உடை உடுத்தியிருந்தான். அடிக்கடி இடது கையில் மோதிர விரலின் அடிப்பகுதியைக் கட்டை விரலால் தடவிக் கொண்டிருந்தான்.

''நான் உங்கள் தந்தையின் தொழில் நண்பன்!'' என்று ராஜு அவனிடம் தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டான்.

''மன்னிக்கவும். நீங்கள் ஒரு டிடெக்டிவ் என்று அப்பா சொன்னார்.''

ராஜு கொஞ்சம் அசடு வழிந்தான். ''தவறு என்னுடையதுதான். நான் உங்கள் தந்தையிடம் முன்பே பேசிக் கொண்டிருந்திருக்க வேண்டும்... நான் டிடெக்டிவ்தான். உங்கள் தந்தை என் இருப்பிடத்துக்கு வந்து என்னைப் பார்த்தார். உங்களைப் பார்த்துப் பேசுவதற்காக நான் அவரோடு புறப்பட்டு வந்தேன்.''

''அப்பா எதற்கு உங்களோடு தொடர்பு கொள்ள வேண்டும்? நான்தான் ஒரு டிடெக்டிவ்வைச் சந்திக்கலாம் என்று நினைத்துக் கொண்டிருந்தேன்.''

ராஜு சிரித்தான். ''எனக்கு இரட்டிப்பு பிஸினஸ். உங்கள் தந்தையின் பிரச்னையைப் பிறகு கவனிக்கலாம். இப்போது உங்கள் பிரச்னையைப் பற்றிச் சொல்லுங்கள்.''

சுற்றுமுற்றும் பார்த்து விட்டுத் தணிந்த குரலில் செந்தில் சொன்னான். ''நான் ஒரு இக்கட்டில் மாட்டிக் கொண்டிருக்கிறேன் – ஒரு பிளாக்மெயில் ரூபத்தில்.''

''என்னது?''

''ஆமாம். எங்கள் தோட்டக்காரன் கங்காதரன். முதல்முறை அவனுக்கு ஐயாயிரம் கொடுத்தேன். இரண்டாவது தடவை பணம் புரட்ட முடியாமல்...''

''நான் சொல்லட்டுமா? உங்கள் மோதிரத்தைக் கொடுத்திருக்கிறீர்கள். வைர மோதிரமா?'' என்று, அவன் இடதுகை மோதிர விரல் வெறுமையாக இருப்பதைப் பார்த்துக் கொண்டே ராஜு குறுக்கிட்டுக் கேட்டான்.

''இல்லை. என் அம்மாவின் ஞாபகார்த்தமாக வீட்டில் இருக்கும் நகைகளிலிருந்து ஒரு வைரத்தோட்டைத் திருடி எடுத்துக் கொடுத்தேன்.''

ராஜு மீண்டும் அசடு வழிந்தான்.

''ஆனால் மோதிரத்தைப் பற்றி நீங்கள் சொன்னதிலும் கொஞ்சம் உண்மை இருக்கிறது. சிவப்புக்கல் பதித்த ஒரு சாதாரண மோதிரம் – அப்பா ராசி என்று கொடுத்திருந்தார் – இந்த விரலில் போட்டிருந்தேன். போன வாரம் எண்ணெய் தேய்த்துக் குளிப்பதற்காகக் கழற்றி என் அறையில் வைத்தேன். அதன்பின் அதைக் காணவில்லை. எல்லா வேலைக்காரர்களையும் விசாரித்து விட்டேன். நல்ல அழகான சிவப்புக்கல். இரட்டிப்புக் கூடப் பளிச்சென்று மின்னும்.''

''உங்கள் அப்பாகூடத் தம்முடைய கஃப் லிங்கை – சிவப்புக்கல் பதித்தவை – போன வாரம் தொலைத்து விட்டதாகச் சொன்னாரே?''

செந்திலுக்கு இது புதிய செய்தியாக இருந்தது.

ராஜு தனக்குள் கணக்கிட்டுப் பார்த்தான். இந்த வீட்டில்தான் போனவாரம் எத்தனை நிகழ்ச்சிகள்! அப்பா கஃப் லிங்கைத் தொலைத்திருக்கிறார். பிள்ளை மோதிரத்தைத் தொலைத்திருக்கிறான். அப்பா – பிள்ளை இருவரையுமே தோட்டக்காரன் பிளாக்மெயில் செய்ய ஆரம்பித்திருக்கிறான். இந்தப் 'போன வார'த்தில் என்னவோ இருக்கிறது – கண்டு பிடித்தே ஆகவேண்டிய 'என்னவோ.'

''பிளாக்மெயில் பற்றி ஆரம்பித்தீர்கள். இன்னும் விவரம் சொல்லவில்லை!'' என்று நினைவூட்டினான்.

''போன வாரம், எனக்கும் என் தந்தைக்குமிடையே ஒரு பெரிய வாக்குவாதமே நடந்தது...''

இன்னொரு 'போன வார' நிகழ்ச்சி என்று ராஜு நினைத்துக் கொண்டான்.

''... என் திருமண விஷயமாக. நான் அவர் ஸ்டெனோவை மணந்து கொள்ளப் போகிறேன் – அவர் எவ்வளவு தூரம் எதிர்த்தாலும் சரிதான்.''

''அப்படியானால் கமலா?'' என்று கேட்டுவிட்டு அவன் முகத்தில் ராஜு உணர்வுகளைத் தேடினான்.

''கமலாவா? யார் கமலா?'' என்று செந்தில் ஒன்றும் புரியாமல் கேட்டான்.

'பயலே, நன்றாக நடிக்கிறாய்!' என்று எண்ணிக் கொண்ட ராஜு, ''உங்கள் தோட்டக் காரன் மகள்'' என்றான்.

''அவளா? அவளைப் பற்றி என்ன வந்தது இப்போது? நான் என் கல்யாணத்தைப் பற்றியல்லவா சொல்லிக் கொண்டிருந்தேன்?... உங்களால் ஒரு காரியம் செய்ய முடியுமா? என் தந்தையை என்னிடமிருந்து சில நாட்கள் பிரித்து வைக்க முடியுமா? எதையாவது சொல்லி அவரை எங்காவது அனுப்ப முடியுமா? வேண்டாம், நான் எங்கேயாவது போனால் சரியாகி விடுமா? ஆனால் கங்காதரன்?''

''அவன் என்ன கேட்கிறான்?''

''வேண்டும் போதெல்லாம் பணம் கேட்கிறான். ஒரு... ஒரு குடும்ப இரகசியம் அவனுக்குத் தெரியும் என்று வைத்துக் கொள்ளுங்கள். எக்காரணத்தை முன்னிட்டும் அது வெளியே பரவக் கூடாது.''



ராஜு வேண்டுமென்றே, சிரித்துக் கொண்டே சொன்னான். "நீங்கள் சொல்வதைப் பார்த்தால் கங்காதரனைத் தீர்த்துவிட வேண்டும் என்பதைப்போல் இருக்கிறது."

செந்திலின் முகத்தில் உண்மையான அதிர்ச்சி, இவை தெரிந்தன. "ஓ மை காட்! இல்லையில்லை... அப்படியொன்றும் நிச்சயமாக இல்லை... மைகாட்!"

"இப்போது கங்காதரன் எங்கே இருக்கிறான்?"

"அவனும் அவன் பெண்ணும் பின்னால் தோட்டத்தில் இருப்பார்கள்."

"அவன் வீடு?"

செந்தில் அந்த வீடு இருக்கும் இடத்தைக் காட்டினான்.

"சரி, நான் இப்போது அந்த வீட்டுக்குப் போகப் போகிறேன். நீங்கள் எப்படியாவது அவனும் அவன் பெண்ணும் அங்கே வராமல் பார்த்துக் கொள்ளுங்கள்."

ராஜு கூடிய மட்டும் எதையும் கலைக்காமல் அப்படி அப்படியே அந்த வீட்டை அலசினான். தட்டுமுட்டுச் சாமான்கள், சமையல் பாத்திரங்கள். ஓர் அலமாரியில் மளிகைச் சாமான்கள். இன்னொரு சிறிய அலமாரியில், ஒவ்வொன்றிலும் இரண்டு–மூன்று என்ற எண்ணிக்கையில், பிரிக்கப்படாத டூத்பேஸ்ட், டாய்லெட் சோப், சலவை சோப், ஷேவிங் கிரீம் வகையறாக்கள் ஒரு மிகப் பெரிய பணக்காரரின் தோட்டக் காரனின் வீடு எப்படி இருக்கும் என்று அவன் உணர்ந்தான். வீடு சுமாரான ஒழுங்குடன் இருந்தது. தான் பார்த்ததில் ஏதோ ஒரு வித்தியாசம் இருப்பதாக அவன் உணர்ந்தான். ஆனால் அது என்னவென்று புரியாமல் ஏமாற்றத்துடன் வெளியே வந்தான்.

முக்கியமான புதிராக அவனுக்குத் தோன்றியது, தந்தையும் மகனும் ஏறக்குறைய ஒரே மாதிரி அவனுடன் பேசியது. ஒருவேளை இரண்டு பேருமே நடிக்கிறார்களோ? இருவரும் சேர்ந்தே ஏதாவது குற்றம் செய்து விட்டு இப்படி வேஷம் போடுகிறார்களோ?

அவன் குழம்பிக் கொண்டே எழுந்து செல்வ கணேசனின் அறைக்குச் சென்றான்.

அவர் ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். மேஜை விரிப்பு ஒரு பக்கம் மேலே தூக்கிக் கொண்டிருந்தது. இவனைப் பார்த்ததும் அவசரமாக அதை இழுத்து விட்டுச் சரி செய்தார். மேஜை விரிப்புக்குக் கீழே எதை மறைத்து வைத்திருக்க முயல்கிறார் என்று யோசித்துக் கொண்டே அவன் நடந்து சென்று அவருக்கெதிரே இருந்த நாற்காலியில் உட்கார்ந்தான். அரையடிக்கு மேல் குஷன் அழுங்கிக் கொடுத்தது. அவர் சற்றும் எதிர்பாராத வகையில் மேஜை விரிப்பைப் பட்டென்று மேலே தூக்கினான்.

கனமான அந்த மேஜை விரிசல் கண்டிருந்தது.

அதில் ஒரு துப்பாக்கிக் குண்டு பதிந்திருந்தது.

ராஜுவின் மூளை மிகவும் சுறுசுறுப்பாக இயங்கியது. அவன் எவ்வளவுதான் வற்புறுத்திக் கேட்டும் செல்வகணேசன் அந்தக் குண்டு எப்படித் தம் மேஜையில் பதிந்தது என்று சொல்ல மறுத்து விட்டார். அவர் அதைத் தாமே மேஜையிலிருந்து எடுத்து அப்புறப் படுத்திவிட முயன்று, எடுக்க முடியாமல் தோல்வியுற்றிருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

அவன் ஆதியோடு அந்தமாக, தான் கேட்டது பார்த்தது எல்லாவற்றையும் நினைத்துப் பார்த்தான். மூளையில் ஏதோ 'க்ளிக்' என்றது. ரொம்பவும் பைத்தியக்காரத் தனமான எண்ணமோ என்று அதை ஒதுக்கிவிட முயன்றான். அது அவனை விட்டுப்போக மறுத்தது.

அவன் செந்திலை அவனுடைய அறையில் மடக்கினான். கொஞ்சம் சரடு விட்டுப் பார்க்க நினைத்தான். "உங்கள் அப்பாவைப் பார்த்து விட்டு வருகிறேன். அவர் எல்லாவற்றையும் சொல்லி விட்டார்" என்றான்.

செந்திலின் முகம் வெளிறியது. அவன் கொஞ்சம் யோசித்து விட்டு, "நான் நம்பவில்லை" என்றான்.

ராஜு தன் துருப்புச் சீட்டை எடுத்தான். "அவர் உங்களைக் கொல்ல வேண்டும் என்று சுடவில்லை. குண்டு எங்கே பாய்ந்தது?"

செந்தில் ரொம்பவும் தயங்கிவிட்டுச் சுவரைக் காட்டினான். சுவரில் ஒரு பள்ளம் மட்டும் தெரிந்தது. "நான் குண்டை தோண்டி எடுத்து எறிந்து விட்டேன்" என்றான்.

ராஜுவுக்கு ஏனோ அந்த நிமிஷத்தில், கீழே தோட்டக்காரன் வீட்டில் வித்தியாசமாக எதைப் பார்த்தோம் என்று புரிந்தது. ஏதோ சொல்லத் தொடங்கிய செந்திலை விலக்கிக் கொண்டு அவன் கீழே ஓடினான். அந்த வீட்டில் நுழைந்தான். கேள்வி கேட்க முற்பட்ட கங்காதரனைத் தன் துப்பாக்கியைக் காட்டி அமர்த்திவிட்டு அவனுடைய



புத்தர் வாழ்ந்த கயா நகரில்தான் சண்டைக்காட்சிகள் நிறைந்த 'ஷோலே' படம் மிகக் குறைந்த நாட்கள் ஓடியிருக்கிறது. (12 வாரம்). அந்தத் தியேட்டரின் பெயர் 'கௌதம புத்தா'.
ஆதாரம்: ஃபிலிம் ஃபேர்.
தகவல்: அனிதா ராமச்சந்திரன்.

பெட்டியைத் திறந்து அந்த டாய்லட் சோப்பை அதனுடைய அட்டைப் பெட்டியிலிருந்து எடுத்தான். செல்லுலோஸ் காகிதத்தைப் பிரித்தான். சோப் கொஞ்சம் தேய்ந்திருந்தது. தன் பேனாக் கத்தியால் அதை இரண்டாகக் கீறினான்.

சிவப்புக் கல் பதிக்கப் பெற்ற இரு கஃப் லிங்ஸும் ஒரு சிவப்புக்கல் மோதிரமும் கீழே விழுந்தன.

''கங்காதரன், சோப்பை இரண்டாக வெட்டி, உள்ளே குழிவாகச் சுரண்டியெடுத்து இப்படி எதையாவது வைத்து இரு துண்டுகளையும் மீண்டும் ஒட்ட வைப்பது மிகப் பழைய ஸ்டண்ட். நடந்ததை நீ சொல்கிறாயா நான் சொல்லட்டுமா!''

அவன் அதிர்ச்சியுடன் பேசாமல் நின்றான்.

''சரி. நானே சொல்கிறேன். போன வாரம் தந்தைக்கும் மகனுக்குமிடையே நடந்த வாக்குவாதம்தான் உனக்கு இந்த ஐடியாவைக் கொடுத்ததோ, இல்லை முன்பே நீ திட்டமிட்டிருந்தாயோ தெரியாது. ஆனால் அவர்கள் சண்டை நிச்சயமாக உன்னைத் தூண்டி விட்டிருக்கிறது. அப்பாவின் கஃப் லிங்கையும், பிள்ளையின் மோதிரத்தையும் சமயம் பார்த்துத் திருடிக் கொண்டிருக்கிறாய். பெரியவரின் ஒரு ஸில்க் சட்டையையும் எடுத்துக் கொண்டிருப்பாய் என்று நினைக்கிறேன். துப்பாக்கியை எங்கேயிருந்து கிளப்பிக் கொண்டு வந்தாய் என்று தெரியவில்லை.

''யாரும் கவனிக்காமல் பெரியவர் அறை வாசலுக்குப் போயிருக்கிறாய். அவர் கவனத்தைத் திருப்ப — அவர் உன் கையைப் பார்க்கா விட்டால் உன் திட்டமே வீணாகி விடுமே — தொண்டையைக் கனைத்துக் கொண்டிருந்திருப்பாய், அல்லது செருப்பால் தரையைத் தட்டியிருப்பாய். ஏதோ ஒன்று. அவர் உன் விரலில் இருந்த சிவப்புக் கல் மோதிரத்தைப் பார்க்கச் சந்தர்ப்பம் கொடுத்து, உன் உடலை வெளியே மறைத்துக் கொண்டு கையை மட்டும் உள்ளே நீட்டி, அவர் இருந்த இடத்துக்குச் சற்றுத் தள்ளிக் குறிவைத்துச் சுட்டு விட்டு ஓடி வந்திருக்கிறாய். பின் மோதிரத்தைக் கழற்றிவிட்டு, ஸில்க் சட்டையை அணிந்து கஃப் லிங்கை மாட்டிக் கொண்டு அவற்றை மட்டும் செந்தில் கவனிக்க வாய்ப்பளித்து அவன் அறையில் அவனுக்குக் கொஞ்சம் தள்ளிச்சுட்டு விட்டு வந்திருக்கிறாய். அதன்பின் உன் வேலை சுலபம். செந்தில் சுட்டது உனக்குத் தெரியும் என்று சொல்லிப் பெரியவரை மிரட்டி இருக்கிறாய். செந்திலிடமும் டிட்டோ! அவனிடம் உன் பெண்ணைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. அதனால் அவளை மணந்து கொள்ளுமாறு பெரியவரிடம் கேட்டிருப்பாய் என்று நினைக்கிறேன்.

''ஆனால் ஒரே ஒரு தப்பு செய்து விட்டாய். மோதிரத்தை, கஃப் லிங்கை எங்காவது தூர எறிந்திருக்கலாம். கோணல் புத்தியுடன் அவற்றைச் சோப்புக்குள் ஒளித்து வைத்தாய். அந்தச் சோப்பை இரும்புப் பெட்டியில் நீ வைத்திருந்ததால்தான் நான் விழித்துக் கொண்டேன். உபயோகப் படுத்தப் படாத — பிரிக்கப் படாத சோப்புக்கள் ஓர் அலமாரியில் இருக்க, உபயோகிக்கும் சோப்புக்கள் குளியல் அறையில் இருக்க, இந்த ஒரே சோப்பை மட்டும் பத்திரமாக நீ பெட்டிக்குள் வைத்தது எனக்கு ரொம்பவும் வித்தியாசமாகப் பட்டது.

''அவர்கள் உன் நாடகத்தை நன்றாக நம்பியிருக்கிறார்கள். தாங்கள் இருவரும் சேர்ந்திருந்தால் அடுத்தவருக்குத் தன்னைச்சுட இன்னொரு வாய்ப்புக் கிடைத்து விடும்; அதனால் அவரும் அல்லவா தண்டனையை அனுபவிக்க வேண்டும் என்று தவிக்கும் அளவுக்கு நல்ல உள்ளங்கள் அவை. இப்போது நீயாகப் போய் அவர்கள் காலில் விழுந்து நடந்ததைச் சொல்கிறாயா, இல்லை...''

அடுத்த மாதத்தில் பெரியவர் ஆசியுடன் செந்தில் அவர் ஸ்டெனோவைத் திருமணம் செய்து கொண்டான்.




படத்தில் காஸ்ட்ரோ தாடியுடன் நிற்பவர் திரு பீ. கே. ராய். உடன் இருப்பவர்கள் திரு சக்கிரபர்த்தியும் திரு சர்க்காரும். மூட்டை முடிச்சுகளுடன் சைக்கிளிலேயே சாரணர் 'ஜம்பூரி'க்காக அதன் கடைசி நாளன்று மாலை சென்னை வந்து சேர்ந்தனர்!

''பீஹார், நேபால், பூடான், ஸிக்கிம், அஸ்ஸாம்' பங்களா தேஷ் ஆகிய பிரதேசங்களை எல்லைகளாகக் கொண்டது ஸிலிகுரி. அங்குதான் நாங்கள் வசிக்கிறோம். நாங்கள் மூவரும் Field surveyors ஆக பணி புரிகிறோம். மூவரும் ஸிலிகுரியிலிருந்து டிஸம்பர் 27ம் தேதி கிளம்பினோம். ஒரு நாளைக்கு 85 முதல் 90 மைல் வரை கடந்து மொத்தம் 1391 மைல் பயணம் செய்து வந்திருக்கிறோம். ஒரு கட்டத்தில் ஜம்பூரி முடிந்த பிறகுதான் சென்னையை அடைவோம் என்று எங்களுக்குத் தோன்றியதால் தினமும் தூங்கும் நேரத்தை இரண்டே மணி நேரமாக மட்டும் குறைத்துக் கொண்டோம். அப்படி இருந்தும் ஜாம்பூரி முடியும் நாளான இன்றுதான் அடைய முடிந்தது.

''ஜம்பூரியின் கடைசி நிகழ்ச்சிகளில் பங்கேற்று விட்டு, சைக்கிளிலேயே கன்னியா குமரி சென்று அங்கிருந்து மறுபடியும் சென்னை வந்து, சென்னையிலிருந்து ரயிலில் 'ஸிலிகுரி' செல்வதாக இருக்கிறோம்'' என்றார் திரு ராய்.

வெளி நாடுகளிலிருந்தும், ஏனைய பல மாநிலங்களிலிருந்தும், வந்த பல்லாயிரக்கணக்கான சாரண சாரணியருக்கும் போதிய சுகாதார வசதிகள் செய்து கொடுக்காததால் அவர்கள் மிகவும் அசௌகரியத்துக்கு உள்ளானார்கள் என்று கேள்விப்பட்டிருந்த எனக்கு, இம்மூவரும் தாமதமாக வந்ததால் பாதகமில்லை என்றே தோன்றியது. பேட்டி: கோகுல்

புகைப்படம்: மன்னை மூர்த்தி



# மும்முனைகள்

கி. ராஜேந்திரன்

அத்தியாயம் 11

ஒரு ஞாயிற்றுக் கிழமை யன்று சத்யா படுக்கையை விட்டு எழுந்து சோம்பல் முறித்தாள். தன் தனி அறையிலிருந்து வெளியேறி, மாடிப்படி களில், இறங்கி, கீழே வரவேற்பு அறைக்கு வந்தாள். டேப் ரிகார்டரில் சௌராஸியாவின் ஃப்ளூட் கேஸட்டைப் போட்டு இயக்கினள். மதுவந்தி ராகம் அறையை நிறைக்க ஸோபாவில் அமர்ந்தாள். ஒரு பக்கமாக இருந்த குஷன் அவளை வரவேற்றது. அதைத் தட்டிக் கொடுத்துவிட்டுத் தலை சாய்த்தாள். இமைகள் மூடிக் கொண்டன. இன்னிசை இதயத்தை நிறைக்கக் கால் நீட்டிப் படுத்தவாறு அவள் பிரமீளாவைப் பற்றி நினைக்க ஆரம்பித்தாள். உமன்ஸ் லிப ரேஷனில் அவளுக்கு இருந்த ஆர்வம், கிரிக்கெட்டில் இருந்த ஆசை எல்லாம் அவளைப் பிரமிக்க வைத்தன. இவ்வளவு கெட்டிக்காரி யாக இருந்த அவள் பரீட்சையில் தேறும் வழி மட்டும் தெரியாமல் தவித்தாள். அவளுடைய பொது அறிவு, விவாதத் திறன், பேச்சாற்றல் எல்லாம் பார்த்தவர்கள் பாடப் புத்தகங்களைப் படித்துப் பரீட்சை தேறுவதில் அவளுக்கு அவ்வளவு சாமர்த்தியம் போதாது என்று நம்பவே மாட்டார்கள். 'விசித்திர மான பெண்தான்' என்று தனக்குள் எண்ணிக் கொண்டு அவளை மனத்திரையில் அணு அணுவாக ரசித்துக் கொண்டிருந்தாள் சத்யா.

இரண்டு தினங்களுக்கு முன் பல்வேறு கல்லூரிகளுக்கு இடையில் நடந்த பேச்சுப் போட்டியில் அவள் கலந்து கொண்டு முதல் பரிசு பெற்றிருந்தாள். அங்கும் அவளுக்கு ரொம்பவும் பிடித்தமான பெண்கள் விடுதலை பற்றித்தான் பேசினள். அவள் கூறிய பல விஷயங்கள் சமூகமே நாணித் தலைகுனிய வேண்டிய அளவில் இருந்தாலும் குறிப்பாக ஒரு விஷயம் கூடியிருந்த ஆசிரியர்கள், மாணவ மாணவிகள் எல்லோரையும் திகைப்பில் ஆழ்த்தியது.

''சமுதாயத்தில் பெண்ணுக்குச் சம அந்தஸ்து தருவதென்பது ஒரு புறம் இருக்கட்டும்' உண்மையான சம அந்தஸ்து பெற இன்னும் எவ்வளவோ போராட்டங்கள் நடத்த வேண்டியிருக்கிறது. இங்கே இன்னும் அடிப்படை மனப்பான்மையே மாறவில்லை. பெண்ணைத் துச்சமாக, தேவையற்ற ஒரு பளுவாக, பொருளாதாரச் சுமையாகக் கருதுகிற போக்கு முதலில் மடிய வேண்டும்.

''அப்படி யார் கருதுகிறார்கள் என்கிறீர்களா? சாமானியர்கள் கூட இப்படி அதிகமாக நினைப்பதில்லை. படித்தவர்கள், சமூகத்தில் நல்லதொரு நிலையில் இருப்பவர்களில்தான் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் இப்படி எண்ணுகிறார்கள். வெளிப்படையாக இதனைச் சொல்ல மாட்டார்கள், நாகரீகம் கருதி. ஆனால் அவர்கள் உள்ளங்களில் உள்ள உண்மையான உணர்ச்சிகளைப் பதிவு செய்யக் கூடிய ஒரு டேப் ரிகார்டர் கண்டு பிடிக்கப் படுமேயானால் இவர்களுடைய ரகசிய எண்ணங்கள் அம்பலமாகி விடும். அத்தகைய ஒரு வாய்ப்பும் இந்திய விஞ்ஞானிகளுக்கு ஒரு முறை கிடைத்தது. புதுதில்லியில் AIMS என்ற அகில இந்திய மருத்துவ ஆராய்ச்சி நிறுவனம் ஒன்று இயங்குகிறது. பிறக்கப் போகும் குழந்தை ஆணு பெண்ணு என்று முன்கூட்டியே கண்டறிகிற ஆராய்ச்சிகளில் இந்நிறுவனம் இறங்கியது. சில கொடிய வியாதிகள் ஆண் வாரிசுகள் மூலமாகவே பரம்பரையாகப் பரவுகின்றன. பிறக்கப் போவது ஆணு பெண்ணு என்பதைத் தெரிந்து கொண்டால் கொடிய வியாதியுடனேயே ஓர் ஆண்மகவு பிறப்பதைத் தடுத்து விடலாம். எனவே இந்த ஆராய்ச்சியினால் நல்ல பலன் உண்டு.

''ஆனால் இந்த ஆராய்ச்சி நடைமுறையில் மேற்கொள்ளப் பட்டபோது நடந்தது என்ன தெரியுமா? முந்நூறு கர்ப்பவதிகள் இந்த ஆராய்ச்சிக்கு உதவ முன்வந்தார்கள்.

தத்தம் கணவன் மார்களோடு வந்தார்கள். முந்நூறு தம்பதிகளும், 'பிறக்கப் போவது பெண்ணாக இருந்தால் கருச்சிதைவு செய்து விடுங்கள்; ஆணாக இருந்தால் வேண்டாம்' என்றார்கள்! படித்தவர்கள், நாகரீகம் மிக்கவர்கள், தலைநகரில் வசிப்பவர்கள்தான் இப்படிச் சொன்னார்கள்!

''எண்ணிப் பார்க்கவும் மனம் கூசலாம்; அருவருப்பாக இருக்கலாம்; ஆனால் ஒரு விஷயம் அருவருப்பானது என்பதாலேயே அதைச் சந்திக்கப் பயந்து தயங்கி ஒதுக்கி விட்டால் இந்தத் தேசமும் மக்களும் முன்னேறவே முடியாது!''

வன்மையான பேச்சாற்றலுடன் இந்தச் சம்பவத்தை முத்தாய்ப்பாக வைத்துப் பிரமீளா தெளிவாகப் பேசி முடித்த போது அவள் அரங்கிலிருந்து மறைந்து சில வினாடிகள் வரையிலும் திகைப்பு நீங்கவில்லை. பின்னர்தான் தம்நிலை உணர்ந்தவர்களாக அவையினர் கரகோஷம் செய்து பாராட்டுத் தெரிவித்தார்கள்.

சத்யா எதிர்பார்த்தபடியே பிங்கி முதல் பரிசு பெற்றாள். ''இந்த விவரங்களை யெல்லாம் எங்கே பிடிக்கிறே நீ?'' என்று வியந்து அவளைக் கேட்டான். முதல் பரிசான நூறு ரூபாயையும் உடனே கரைத்து விடுவது என்ற தீர்மானத்துடன் அவர்கள் புளூ டயமண்ட் ரெஸ்டாரண்டில் அமர்ந்து விலை உயர்ந்த தின்பண்டங்களுக்கு ஆர்டர் கொடுத்திருந்தார்கள். ''நாளிதழ்களில் வரும் செய்திகள், நூலகங்களில் உள்ள புத்தகங்களில் கிடைக்கும் தகவல்கள் எல்லாம் தான்'' என்று அவனுக்குப் பதில் சொன்னாள் பிரமீளா. ''பெண்கள் விடுதலை, பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதி பற்றி அவ்வப்போது கிடைக்கும் தகவல்கள், செய்திகளைச் சேகரித்து எழுதி வைத்துக் கொள்கிறேன். இப்போது நான் சேர்த்து வைத்துள்ள தகவல்களைக் கொண்டு ஒரு தீஸிஸ் எழுதி டாக்டரேட் வாங்கி விடலாம்.''

''முதலில் கிராஜுவேட் ஆவதற்கு உண்டான வழியைப் பார்'' என்றான் சத்யா.

''அது கிடக்கு'' என்றாள் பிங்கி. ''நானாவது பட்டம் பெறவாவது ? எனக்குப் பிடிக்காத பாடங்களை நான் ஏன் படிக்க வேண்டும்? எனக்கு எதில் ஆர்வம் இருக்கிறதோ அதை மட்டும் நான் கற்றுத் தேர்ந்து ஏன் கிராஜுவேட் ஆகக்கூடாது? இதற்கு வசதி செய்யாத கல்லூரிகள் இருந்து என்ன பயன்? இந்தத் தேசம் சுதந்திரம் பெற்றுத்தான் என்ன பிரயோஜனம்? எனக்குத் தாவர இயல் பிடிக்கும் என்றால் அதை மட்டும் நான் படித்து விட்டுப் போகலாமில்லையா? எதற்காகக் கூடவே பௌதிகத்தைப் படி, ரசாயனத்தைப்படி என்று கழுத்தறுக்கிறார்கள்? ஐ வோட் ஃபார் அப்ஸல்யூட் ஃப்ரீடம் இன் எஜுகேஷன்!''

''நீ கல்வி மந்திரியாக வேண்டும்; சமுதாய நல மந்திரியாகவும் வேண்டும்; உன் கருத்துக்களைச் செயல்படுத்தப் போதிய நிதி ஒதுக்கீடு தேவை. அதனால் நீயே நிதி மந்திரியாகவும் வேண்டும்...''



''ஒரே வார்த்தையில் பிரதம மந்திரியாக வேண்டும் என்று சொல்லிவிட்டுப் போங்களேன்'' என்றாள் பிரமீளா.

## அத்தியாயம் 12

அவளுடைய உற்சாகத்தையும் தன்னம்பிக்கையையும் எண்ணி இப்போதும் வியந்து போனான் சத்யா.

''ஸார் காப்பி!'' என்ற குரல் அவனைச் சிந்தனையிலிருந்து இப்பால் இழுத்தது. தனபாக்கியம்தான் மூன்று டபரா டம்ளர்களில் ஆவி பறக்கும் காப்பியுடன் வந்து நின்று, மகனை அன்பு இழையோடும் குரலில் விளையாட்டாக 'ஸார்' போட்டுஅழைத்துக் கொண்டிருந்தாள்.

பிங்கி பற்றிய நினைவுகளிலிருந்து விடுபட விரும்பாதவனாக சத்யா, ''இப்போ என்னம்மா அவசரம்? ஞாயிற்றுக் கிழமைதானே, தூங்க விடேன்'' என்றான்.

''ஞாயிற்றுக் கிழமை என்கிறதாலேதான் இவ்வளவு லேட்டா காப்பி எடுத்துக்கிட்டு வரேன். மணி ஏழரை ஆகிறது. கெட் அப்! கெட் அப்!'' என்றாள் தனபாக்கியம். பிறகு சற்றுப் பரபரப்புடன், ''எழுந்திருடா! அப்பா வரார்'' என்று ரகசியக் குரலில் கூறினாள்.

சத்யா பாதி கோபமும் பாதி மரியாதை கலந்த பயமுமாக எழுந்து உட்கார்ந்து குஷனைச் சரிப்படுத்தினான். ''என்னம்மா ஒரேயடியா பயமுறுத்திட்டே'' என்று கூறிக் காப்பி டம்ளரை எடுத்துக் கொண்டான்.

''இல்லேடா, அப்பா பூஜை முடிச்சாச்சு. அவருக்கும் சேர்த்துத்தான் காப்பி கொண்டு வந்திருக்கேன்'' என்று தனபாக்கியம் கூறி முடிக்கு முன்னரே பளிச்சென்று விபூதி துலங்க வைத்தியலிங்கம் உள்ளே இருந்து வந்து அமர்ந்து கொண்டார். ஒரு கையில் தினசரியையும் இன்னொரு கரத்தில் காப்பி டம்ளரையும் தனபாக்கியத்திடமிருந்து பெற்றுக் கொண்டவர், ''என்னடா, பெட் காப்பியா?'' என்று கேட்டார்; குரலிலேயே தமது ஆட்சேபணையை வெளிப்படுத்தியவராக.

''என்னை என்ன செய்யச் சொல்றீங்க? இந்த அம்மா சொன்னா கேட்கிறதே இல்லே. நான் எழுந்து பல் தேய்ச்சுட்டு வர வரை காத்திருந்தா என்ன? எழுந்ததும் எழுந்திருக்காததுமாய்க் காப்பியைக் கையிலே கொடுத்துடறா. சுத்த மோசம்; ஒரு மடியா, ஆசாரமா ஒன்னும் கிடையாது!''

கலோசனா வந்து பாக்கியிருந்த இன்னொரு காப்பி டம்ளரை எடுத்துக் கொண்டே, ''அம்மா காப்பி போட்டு முடிக்கிறதுக்குள்ளே சத்யாவாகப்பட்டவர் எழுந்து பல்தேய்த்து முகம் கழுவித் தயாராயிருந்தா என்ன?'' என்று கேட்டாள்.

பத்திரிகைச் செய்தியில் லயித்திருந்த வைத்தியலிங்கம் சிரித்தார். ''இதைப் படிக்கிறேன், கேட்கிறியா சத்யா?'' என்று கேட்டுவிட்டுத் தொடர்ந்தார்: ''ஏ. பி. எஸ். நிறுவனத்தில் மீண்டும் லாக் அவுட்! ஏ. பி. எஸ். நிறுவனத்தில் மீண்டும் ஸ்ட்ரைக் நடந்ததைத் தொடர்ந்து லாக்அவுட் அறிவிக்கப்பட்டுள்ளது. முன்பு வேலை நிறுத்தம் நடந்ததைத் தொடர்ந்து லாக்அவுட் அறிவிக்கப் பட்டதும் உடன்பாட்டைத் தொடர்ந்து லாக் அவுட் நீக்கப்பட்டதும் லாக்அவுட் நீங்கியதும் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்ததும், வேலை நிறுத்தத்தையொட்டி லாக் அவுட் அறிவிக்கப்பட்டதும் மீண்டும் உடன்பாடு ஏற்பட்டதும் லாக் அவுட் நீக்கப்பட்டதும் நீங்கள் அறிந்ததே!''

''என்னப்பா இது, தலையைச் சுத்தறது!'' என்றாள் கலோசனா. ''இந்த மாதிரி இருந்தா நம்ம தேசம் எப்போ முன்னேறுவது?''

''ஏண்டா, ரெண்டு மாசமா ஆபீஸுக்குப் போயிட்டு வரியே என்ன தெரிஞ்சுண்டே?'' என்று கேட்டான் தன



பாக்கியம். ''அப்பாவோட நிறுவனத்திலே இந்த மாதிரி நிலைமை என்றைக்காவது இருந்ததுண்டா?'' பெருமை தொனித்தது அவள் குரலில்.

''அப்பாவுடைய திறமைக்கு எல்லாம் ஸ்மூத்தா நடக்கக் கேட்கணுமா?'' என்றான் சத்யா. ''மூன்று டிபார்ட்மெண்ட்டிலே இது வரை மாறிமாறி வேலை செய்திருக்கேன். மற்ற இரு இலாக்காக்களிலும் காரியங்கள் எப்படித் தங்கு தடை இல்லாமல் மளமளன்னு நடக்கிறது என்று தெரிஞ்சுக்கிட்டிருக்கேன். இப்பத்தான் சர்வீஸுக்குப் போயிட்டு வந்த எழுபத்தெட்டு மாடல் கெடிலாக் கார் மாதிரி அகவினி எண்டர்பிரைஸஸ் இயங்கறது!''

பேப்பரை மடித்துப்போட்ட வைத்திய லிங்கம், ''அதற்குக் காரணம் என்ன தெரியு மாடா?'' என்று கேட்டார்.

''என்னப்பா காரணம்? அந்த ரகசியத்தை நாங்களும் தெரிஞ்சுக்கறோம்'' என்றாள் கலோசனா.

''நிர்வாகத் திறன் எப்படி இருக்கணும் என்று போலார்ட் என்ற அறிஞர் ரொம்ப சிம்பிளா சொல்லியிருக்கார். Executive ability is deciding quickly and getting somebody else to do the work!''

''போலார்டு என்ன போலார்டு! இங்கி லீஷிலே யாராவது சொன்னாத்தான் உங்க ளுக்கு உசத்தியாக்கும். இரண்டாயிரம் வரு ஷங்களுக்கு முன்னே, 'இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன் கண் விடல்னு' வள்ளுவர் சொல்லியிருக்காரே'' என்றாள் தனபாக்கியம்.

''இத்தனைக்கும் வள்ளுவர் ஒரு எம். பி. ஏ. பட்டம் கூட வாங்கினதில்லே'' என்றாள் கலோசனா.

''வள்ளுவர் வாக்குப்படி உங்க அப்பா எல்லாக் காரியங்களிலும் நடந்துக்கிட்ட தாலேதான் ஆயிரம் ரூபாய் மூலதனத்துடன் ஆல விதை ஊன்றியமாதிரி ஆரம்பிச்ச பிஸினஸ் இன்று விழுது விட்டுப் பெரிய மரமா வளர்ந்திருக்கு'' என்றாள் தனபாக் கியம்.

''எப்படி அப்பா இதைச் சாதிச்சே?'' கலோசனா கேட்டாள்.

''என் பெயர் வைத்தியலிங்கம். நான் தயாரிப்பது மருந்துகள். என் மனைவி பெயர் தனபாக்கியம். அகவினி எண்டர்பிரைஸஸ் வளர்ச்சி பெறக் கேட்பானேன்?''

''ஆமாம், அகவினி எண்டர்பிரைஸஸ்ன்னு என்ன பேரு? வேறே மாடர்ன் நேம் ஒண்ணும் கிடைக்கல்லியா?'' என்றான் சத்யா.

''மண்டு! அகவினி தேவர்கள்னு கேள்விப் பட்டிருக்கியா?''

''அவங்க என்ன பெரிய சினிமா ஸ்டார் களா, இல்லே, அரசியல் வாதிகளா, அவங்க பெயர்களை நாங்க கேள்விப்படறதுக்கு? ஏதோ தேவர்கள், அவ்வளவுதானே?'' என் றாள் கலோசனா.

''மக்களுடைய நோய்களை நீக்கி அருள் புரிபவர்கள் அகவினி தேவர்கள் என்று வேதம் சொல்கிறது. அவர்கள் ஒரே குதிரை மீது பயணப்பட்டு வரும் இரட்டையர்கள்.''

''ஓ! புரிஞ்சு போச்சு. ஒருத்தர் டாக்டர், இன்னொருவர் ஃபார்மஸிஸ்ட்'' என்றாள் கலோசனா.

''அப்படி இராது. ஒருவர் நோய்த் தடுப்புக்கு உதவி ஆரோக்கியம் பேணு கிறவர்; இன்னொருவர் வந்த நோயைக் குணப்படுத்துகிறவர்'' என்றான் சத்யா.

''எப்படி வேணும்னாலும் வைச்சுக்குங்க. அகவினி என்டர்ப்ரைஸஸ்ன்னு பெயர் வைச் சதுக்குக் காரணம் புரிஞ்சுதில்லே? ஆளை விடு!'' என்றார் வைத்தியலிங்கம்.

''அம்மா! அப்பாவுடைய வெற்றிக்கு இன்னொரு காரணமும் இருக்கு! இரண்டு வரியிலே ஒரு கொள்கையை எழுதி அதைத் தன் மேஜைக் கண்ணாடிக்குக் கீழே செருகி வைச்சிருக்கார். நான் ஒரு நாளைக்கு ரகசி யமா அவர் அறையில் அதைப் பார்த்துப் படிச்சுட்டேன்.''

ஆர்வத்துடன், ''என்னடா அது? என்ன?'' என்று கேட்டாள் தனபாக்கியம்.

''பெஞ்சமின் ஃப்ராங்க்ளின் சொன்னது. Drive thy business; or it shall drive thee!''

''அதாவது, பெண்டாட்டியை நடத்துகிற மாதிரி வர்த்தகத்தை அல்லது தொழிலை நடத்தணும். அதை விரட்டிக் கிட்டே இருக்கணும். இல்லாத போனா அது நம்மை விரட்ட ஆரம்பிச்சுடும்!'' என்று கூறிச் சிரித்தார் வைத்தியலிங்கம்.

''நான் என்ன மோட்டார் காரா டிரைவ் பண்ண? இல்லே செக்குமாடா, விரட்டிக் கிட்டே இருக்க? நானும் இந்த வீட்டுக்காக எவ்வளவோ உழைச்சு உழைச்சு ஓடா தேய்ஞ்சுட்டேன்'' என்றாள் தனபாக்கியம்.

''ஆமாம், அப்பா! அம்மாவுக்குப் பொறுப் புக்கள் ரொம்ப அதிகம். சிரமப்படறா. அவ ளுக்கு உதவிக்கு யாரையாவது ஏற்பாடு செய் யணும்'' என்றான் சத்யா.

''ஏன் வேலைக்காரன் இல்லே? சமையலுக்கு ஆள் இல்லே? எல்லாரும் ஸ்ட்ரைக் பண் ணிட்டாங்களா என்ன?'' என்று புரியாமல் கேட்டார் வைத்தியலிங்கம்.

''சுவரிலிருந்த செங்கல் எல்லாம் இப்படி எப்படி உடைஞ்சது?''
''படம் மாட்டினேன்''
''படமா? என்ன படம்?''
''புரூஸ் லீ படம்!''



''அப்பா! சத்யா சொல்றது உங்களுக்கு விளங்கலையா அவன் வேலைக்காரர்களைப் பற்றிச் சொல்லலை. வீட்டு நிர்வாகப் பொறுப்பை அம்மாவிடமிருந்து ஏத்தக் கூடிய மருமகள் வீட்டுக்கு வரணும் என்கிறான். இன்னும் தெளிவாகச் சொல்லணும்னா தனக்குத் கல்யாணம் பண்ணி வைக்கச் சொல்றான்'' என்றாள் கலோசனா.

''ஏண்டா, ஒரு தங்கை கல்யாணம் பண்ணுகிற வயசிலே இருக்கா என்கிறதையே மறந்துட்டியா?'' என்றாள் தனபாக்கியம்.

''அவளுக்கு என்னம்மா அவசரம்? இன்னும் இரண்டு வருஷம் படிப்பு பாக்கி யிருக்கு. அதையும் எத்தனை வருஷங்களில் முடிக்கப் போகிறாளோ, தெரியாது. அப்புறம்னா யோசிக்கணும்?''

'''டேய்! பெண்ணைத் தேடுகிற காரியமாவது எங்களுக்கு விட்டு வைச்சிருக்கியோ, இல்லே நீயே மனைவியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு விட்டாயா?'' என்று வைத்திய லிங்கம் கேட்டார்.

''ஏம்பா, உங்களுக்கு இருக்கிற வேலை போதாதுன்னு இந்தச் சிரமமெல்லாம் வேறு கொடுப்பேனா நான்?'' என்றான் சத்யா.

''அடடா என்ன கரிசனம்!'' என்றார் வைத்தியலிங்கம்.

''அண்ணா! எனக்கு மன்னியா வரப் போகிறவ என்ன படிச்சிருக்கா? பி. ஏ. வா எம். ஏ. வா?'' – கலோசனா கேட்டாள்.

'''பி. ஏ. ஃபஸ்ட் இயர்.''

''ஏண்டா, பி. ஏ. ஃபஸ்ட் இயர் படிக்கிற உன் தங்கைக்குக் கல்யாணத்துக்கு அவசர மில்லேன்னு சொன்னே; உன் காதலிக்கு மட்டும் இப்போ கல்யாணத்துக்கு அவசரம் வந்துட்டதோ?'' என்றார் வைத்தியலிங்கம்.

''அதுக்குக் காரணம் இருக்குப்பா!''

''ஐயய்யோ! நடக்கக் கூடாதது ஏதாவது நடந்து போச்சா? எத்தனை மாசம்!'' என்று பதறினாள் தனபாக்கியம்.

''சேச்சே! அதெல்லாம் ஒண்ணுமில்லேம்மா. நான் என்ன சொல்ல வந்தேன்னா, என் தங்கை பி. ஏ. ஃபஸ்ட் இயர் படிச்சாலும் அவளுக்கு வயசு பதினேழு ஆறது. பிங்கிக்கு இருபத்திரண்டு ஆயிடுத்தே!''

''படிப்பிலே அவ்வளவு கெட்டிக்காரியா? அப்போ சீக்கிரம் கல்யாணத்தை முடிச்சுட வேண்டியதுதான். அது சரி, அது என்ன பேரு, பிங்கின்னு.?''

''அதுவா அம்மா? அவ அப்பா அம்மா வைச்ச பேரு பிரமீளா. ஆனா இவ பெல் பாட்ஸ்லேயா, ஸ்ட்ரெச் பாண்ட்டோ, டி ஷர்ட்டோ, மாக்ஸியோ எது உடுத்திண்டாலும் பிங்க் கலர்லே இருக்கும். அதனால் எல்லாருமாச் சேர்ந்து...''

''ஓகோ! புடைவை தவிர பாக்கி எல்லா விதமான டிரெஸ்ஸும் அணிவாளாக்கும்!''

''என்னம்மா கேள்வி இது? புடைவை கட்டிண்டு கிரிக்கெட் ஆட முடியுமா?''

''அது வேறயா? கஷ்டம் கஷ்டம்!''

''ஏண்டா, இந்தப் பொண்ணு உன் அம்மாவுக்கு வீட்டு நிர்வாகத்திலே உதவப் போறா?'' என்று வைத்தியலிங்கம் கேட்டார்.

''ஏன் பண்ணமாட்டாப்பா? பேஷாகப் பண்ணுவா, காலேஜுக்குப் போய்வர நேரம்




''போலீஸ் வேலைக்கு மனு போட்டிருந்த ஒருவர் நேர்முகத் தேர்வுக்குச் சென்றார். எல்லா கேள்விகளுக்கும் அவர் பட்பட்டென்று பதில் சொன்னார். கடைசியாக ஒரு கேள்வி:

''மகாத்மா காந்தியைச் சுட்டுக் கொன்றது யார்?''

வந்தவர் வெகு நேரம் யோசித்தார்!

கேள்வி கேட்டவர், அவருக்கு ஒரு வாய்ப்பு கொடுக்க எண்ணி, ''நாளைக்குத் தெரிந்து கொண்டு வா'' என்று அனுப்பினார்.''

வீட்டுக்கு வந்த மனுதாரரை மனைவி கேட்டாள்: ''வேலை கிடைத்து விட்டதா?''

''கிடைத்தாற் போல்தான். ஆரம்பத்திலேயே ஒரு கொலை கேஸுக்குத் துப்பறிந்து வரச் சொல்லி யிருக்கிறார்கள்'' என்றார் அவர். - ராமுசாமி

---

போக, கிரிக்கெட் .பிராக்டிஸ் நேரம் போக, பீச்சு சினிமா டிராமான்னு என்னோடு வெளியே போகிறநேரம் போக, ஸோஷியல் சர்வீஸ், ஜெப் ஆக்டிவிடி நேரம் போக...''

கலோசனா இடைவெட்டி, ''மேக்அப், அலங்காரம் எல்லாம் செய்துக்கிற நேரம் போக, தூங்கி எழுந்திருக்கிற நேரம் போக..'' என்று அடுக்கிக் கொண்டேபோய்க் கடைசியில் ''பாக்கி இருக்கும் நேரத்தில் தனபாக்யத்துக்கு உதவுவாள்'' என்றாள்.

''பாக்யம்! இத்தனை அனுசரணையான மாட்டுப் பெண் வரப்போகிறாள் என்பதால் தான் உனக்குத் தனபாக்கியம்னு பெயர் வைச்சாங்க போலிருக்கு! மேலே ஆகவேண்டியதைப் பாரு'' என்றார் வைத்தியலிங்கம்.

''அதுக்கென்னங்க; இந்தப் பெண்ணைப் பெத்தவங்க ஒரு நடை வந்து நம்மை மரியாதைக்கு அழைச்சுட்டுப் போயிட்டாங்கன்னா அப்புறம் நாம் போய் பெண்ணைப் பார்த்துட்டு வரோம்'' என்றாள் தனபாக்கியம்.

''அழகுதான், யோகேஷாவது இங்கே வரவாவது?'' என்றான் சத்யா.

''யாரு? யாரு?'' என்று சோபாவில் முன்னுக்கு வந்து கேட்டார் வைத்தியலிங்கம். ''பேரு என்ன சொன்னே?''

''யோகேஷ், அப்பா! மிஸ்டர் யோகேச வரமூர்த்தி! யோகேஷ் அண்டு கம்பெனி, எக்ஸ்போர்ட்டர்ஸ், தெரியாது?''

பிரமித்துப் போய்ச் சோபாவில் சாய்ந்தார் வைத்தியலிங்கம். 'என்னவாயி விட்டது இவருக்கு?' என்று வியந்தார்கள் தாயும் மகளும்.

(தொடரும்)





''சோனிக் குதிரைக்கும் ஆரோக்கியமான குதிரைக்கும் வித்தியாசம் தெரியுமா?'' என்றார் என்னைப் பார்த்ததும் டைரக்டர் வி. வி. ராஜேந்திரன். 'பார்த்தாலே தெரியாதா இதென்ன கேள்வி?' என்று எண்ணி நான் விழித்தேன். சிறிது நேரத்திற்குப் பிறகு அவரே சஸ்பென்ஸை உடைத்தார்:

'' 'சுமதி என் சுந்தரி' படத்தில் ஒரு முக்கியமான காட்சி. அந்தக் காட்சிக்கு இரண்டு குதிரைகள் நிச்சயமாகத் தேவை. கொடைக்கானலில் அதை எடுக்கப்போகிறோம் என்று விவரமாக அப்படத்தின் தயாரிப்பாளரிடம் கூறினேன். அவரும் 'மிகச் சிறப்பாக இக்காட்சியை எடுத்துவிடலாம் சார்' என்று கூறிவிட்டுச் சென்றார். கொடைக்கானலில் போய் இறங்கினோம். எடுக்க வேண்டிய ஓரிரு காட்சிகளை எடுத்துவிட்டு, ''குதிரைகள் எங்கே?'' என்றேன். ''வாருங்கள் காண்பிக்கிறேன்'' என்று அழைத்துச் சென்றார் தயாரிப்பாளர். சிறிது நேரம் சென்றதும் எலும்பும் தோலுமாக ஒரு பிராணி நிற்கக்கூட முடியாமல் படுத்துக் கொண்டிருந்தது. இன்னும் சற்றுத் தூரம் சென்றவுடன் அழகான வெள்ளைநிறக் குதிரை ஒன்று மேய்ந்துகொண்டிருந்தது. அதைப் பார்த்துவிட்டு ''இன்னொரு குதிரை எங்கே?'' என்றேன். அதற்குத் தயாரிப்பாளர், ''டைரக்டர் ரொம்பத் தமாஷ் பேர்வழி. இப்பொழுது தானே மற்றொரு குதிரையையும் பார்த்தார். எங்கே என்று கேட்கிறாரே?'' என்றார். அப்புறம்தான் புரிந்தது. எலும்பும் தோலுமாய்ப் படுத்துக் கொண்டிருந்த பிராணியைத்தான் குறிப்பிடுகிறார் என்று. நான் இவ்வளவு தூரம் வந்த பிறகு ஒரு குதிரை சரியில்லை என்ற காரணத்தினால் படப்பிடிப்பை ஒதுக்கி வைக்கத் தயாராயில்லை. ஏனென்றால் மறுபடியும் சிவாஜி கணேசனிடம் கால்ஷீட் கிடைப்பது கஷ்டம். அதனால் ஆண்டவன் மேல் பாரத்தைப் போட்டு விட்டுக் காட்சியை எடுக்க முடிவு செய்தேன்.

''சிவாஜி ஆரோக்கியமான குதிரையில் ஏற நாகேஷ் அந்தச் சோனிக் குதிரையின் மேல் ஏறினார். சிவாஜியின் குதிரை அழகாக நடைபோட்டது. சோனிக் குதிரையும் நடைபோட்டது. முன்னால் அல்ல, பின்னால்! எவ்வளவோ முறை அதைப் பழக்கியும் அது முன்னால் நடை போட மறுத்து விட்டது! வேறு வழியில்லாமல் அந்தக் காட்சியைச் சோனிக் குதிரையின் இஷ்டம் போலவே எடுத்தேன். ஆம்! இன்று கூட படத்தில் சிவாஜியின் குதிரை ராஜ நடை நடக்கும். சோனிக் குதிரை பின்னாலேயே நடப்பதாகத்தான் காட்சி இருக்கும்! ஆனால் இந்த எதிர்பாராத அம்சமே படத்தில் சுவையானதொரு ஹாஸ்யக் காட்சியாக அமைந்து விட்டது!

''என்னுடைய ''நீதி'' படத்தில் மனோரமா டிராக்டரைச் சந்திர பாபுவின்மேல் ஏற்ற முயற்சிசெய்வதாகக் காட்சி. சந்திரபாபு

✕ 'சுமதி என் சுந்தரி'யில் ஜெயலலிதா, சிவாஜி கணேசன்

# நகைச்சுவைக் காட்சியில் ஒரு சோகக் கதை — ஸி.வி.ராஜேந்திரன்

தப்புவதற்காக வயல் வெளி எல்லாம் சுற்றவேண்டி வரும். ஆனல் அவருக்கோ உடல்நிலை சரியில்லை. எனவே அவருக்குத் தொந்தரவு கொடுக்கா வண்ணம் வேறு காட்சிகளை குளோஸ் அப் ஷாட்களாகவே அமைத்து எடுத்துக் கொண்டிருந்தேன். ஆரம்பத்திலிருந்தே ''எனக்கு உடம்பு நன்றாக இருக்கிறது'' என்று சொல்ல ஆரம்பித்து விட்டார் சந்திரபாபு. இரண்டு, மூன்று நாட்கள் நகர்ந்து விட்டன. தமக்கு உடம்பு குணமாகி விட்டது என்று கூறி என்னை நம்பவைத்தார். குறிப்பிட்ட டிராக்டர் காட்சியை எடுக்கும்படி வற்புறுத்தினார். நானும் எடுத்தேன். காட்சி முடிந்து நான் 'கட்' என்று சொன்னதுதான் தெரியும். சந்திரபாபு சோர்ந்து மயங்கிக் கீழே விழுந்து ரத்தமாக வாந்தி எடுக்க ஆரம்பித்தார். நாங்கள் பதறிப்போய் அவரை அருகிலுள்ள ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றோம். கண் விழித்தபோது, ''காட்சி நன்கு அமைந்ததா?'' என்று கேட்டார். எனக்குக் கோபம் சொல்லி முடியாது. ''காட்சி முக்கியமா? உங்கள் உடல் நிலைதானே முக்கியம்?'' என்றேன். ''ஒரு நடிகருக்காக உங்கள் திட்டங்களை நீங்கள் மாற்றிக் கொண்டிருக்கக் கூடாது. எனக்காக மற்றவர்கள் அசௌகரியப்படுவது எனக்குப் பிடிக்காது'' என்றார். ஒரு நகைச்சுவை நடிகர் ஒரு நகைச்சுவைக் காட்சிக்காக எப்படி எல்லாம் கஷ்டப்படுகிறார் என்பதைச் சிரிக்காமல் சிந்திக்க வேண்டும்.

'''வீட்டுக்கு வீடு' படத்தில் ஜெய்சங்கரும், முத்துராமனும் மோதிக் கொள்ளும் காட்சி. வி. கே. ராமசாமி சுற்றுப்புறத்திலிருப்பவர்களை எல்லாம் அழைத்து அந்தச் சண்டையைக் காண்பிக்க வேண்டும். ஷாட்டின் போது திடீரென்று வி. கே. ஆர். புதுமையாக ஒன்றைச் செய்தார். லக்ஷ்மியை அழைத்தவர் செட்டிலிருந்த ஒரு நாற்காலியை எடுத்துக் காமிராவுக்கு முன் போட்டு அமர்ந்தார். 'இப்போதைக்கு இந்தச் சண்டை முடியாது. நிம்மதியா உட்கார்ந்து நிதானமா ரசித்துப் பார்க்கலாம் வா' என்று தாமாகவே வசனம் புனைந்து பேசினார். செட்டிலிருந்த நாங்கள்கூடச் சிரித்து விட்டோம்'' என்று கூறி முடித்தார் ஸி. வி. ராஜேந்திரன். பேட்டி: **சலன்**

✕ 'வீட்டுக்கு வீடு' படத்தில் லட்சுமி, ஜெய்சங்கர்



✕ 'கலாட்டா கல்யாணம்' படத்தில் நாகேஷ், சிவாஜி கணேசன், ஜெயலலிதா



# ஞானக்கடலின் சில அலைகள்

காஞ்சி முனிவர் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள் இந்த இருபதாம் நூற்றாண்டின் ஓர் அபூர்வப் பிறவி. ஸ்ரீமடத்தின் தலைவர் என்ற முறையில் பூஜிக்கப்பட வேண்டிய ஒரு பெரியவர் என்பது மாத்திரமல்ல, கல்வி கேள்விகளில் நிகரற்ற ஒரு பெருங்கடல் என உலகத்தோரால் வழிபடத்தக்க தெய்வ மானிடம். அவர்களது பதவிக் காலத்தில் அவ்வப்போது பகன்ற மணி மணியான வாசகங்களும் கருத்துக்களும், முன்னொரு காலத்தில் ரிஷிகள் அருளிய உபநிஷதப் பொருள்கள் போல் மிளிர்கின்றன. இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்றம் தரும் அவர்களுடைய அருள் வாக்குகள் வெறும் சம்பிரதாயமான வார்த்தைகளல்ல. அல்லது உபதேச வார்த்தைகளுமல்ல. மனித சமுதாயம் உயர்வு பெறுவதற்கு அவசியமான தெய்வீக லௌகிக விஷயங்கள் எல்லாவற்றைப் பற்றியும் காஞ்சிப் பெரியவர்கள் பல ஆண்டுகளாய்ப் பேசி வந்திருக்கிறார்கள். இந்த உரைகளையெல்லாம் முற்றும் பதிவு செய்யக் கிடைக்கவில்லையாயினும், அங்கங்கு




சில பக்தர்கள் ஒருசில அருள்வாக்குகளைப் பதிவு செய்து வந்திருக்கிறார்கள். சில ஆண்டுகளாக 'கல்கி' இதழ்களில் இந்த அருள் வாக்குகள் தொடர்ச்சியாக வெளி வந்தபோது காஞ்சிப் பெரியவர்களின் வித்வத் பெருக்கின் ஆழத்தையும் பரப்பையும் பரவலாகப் பலர் தெரிந்து கொள்ளச் சந்தர்ப்பம் கிடைத்தது. அவற்றைப் படித்த வாசகர்களின் ஆவலையும், கேள்வியுற்றவர்களின் வேட்கையையும் உணர்ந்த வானதி பதிப்பகத்தார் இப்போது ''தெய்வத்தின் குரல்'' என்ற பெயரில், ஆச்சார்ய சுவாமிகளின் அருள்வாக்குகளில் கிடைக்கக் கூடியனவற்றையெல்லாம் தொகுத்து, இரண்டு பகுதிகளாக வெளியிட்டிருக்கின்றனர். முதல் பகுதி வெளியிடப்பட்டு இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது இரண்டாவது தொகுப்பு வெளி வந்திருக்கிறது.

இந்தத் தொகுதியில் முக்கியமாக வேதத்தைப் பற்றியும் மற்றும் வேத சாஸ்திரம், புராணம், தர்ம சாஸ்திரம் பற்றியும், காஞ்சிப் பெரியவர்கள் அவ்வப்போது பல இடங்களில் பேசிய உரைகள் தொகுக்கப் பெற்றிருக்கின்றன. இவ்வுரைகளில் பெரியவர்கள் என்னென்ன துறைகளிலெல்லாம் எவ்வளவு ஆழ்ந்த புலமை பெற்றிருக்கிறார்களென்று பார்க்கும்போது, இவர்களுக்குத் தெய்வானுக்கிரகம் தான் இத்தனை அறிவையும் வளர்த்திருக்கிறது என்று ஒப்புக் கொள்ள வேண்டும். நவீன விஞ்ஞானம், புதைபொருளாராய்ச்சி, கணிதம், வேறென்ன துறையானாலென்ன, இந்த அருள்வாக்குகளில் அங்கங்கு அவர்களுடைய புலமை பளிச்சிடுகிறது. ஒரு சிறு உதாரணம்: தமிழ்நாட்டு சரித்திரத்தில் இவர்கள் எவ்வளவு ஆழமான பயிற்சி பெற்றிருக்கிறார்கள் என்று பார்க்கலாம்.

''இங்கே நம் தக்ஷிண தேசத்தில் தமிழ் மன்னர்கள் ஏற்படுத்திய கடிகா ஸ்தானம், வித்யா ஸ்தானம் எனப்பட்ட கலாசாலைகளில் சதுர்தச வித்தைகள் போதிக்கப்பட்டிருக்கின்றன. கடலூருக்கும் பாண்டிச்சேரிக்கும் நடுவே 'பாகூர்' என்ற இடத்தில் இருந்த வித்தியாசாலை பற்றி கி. பி. 868ம் வருஷத்திய செப்பேடுகள் ஐந்திலே குறிப்பிடப் பட்டிருக்கிறது... விழுப்புரத்துக்கும் திண்டி வனத்துக்கும் நடுவிலுள்ள 'எண்ணாயிரம்' என்ற ஊரிலும் 340 மாணாக்கர்கள் படித்த ஒரு வித்தியாசாலை இருந்ததாகவும், அங்கே பிராசீன சாஸ்திரங்களைச் சொல்லிக் கொடுத்ததாகவும் பதினோராம் நூற்றாண்டைச் சேர்ந்த முதலாம் ராஜேந்திர சோழனின் சாஸனம் ஒன்றிலிருந்து தெரிகிறது... தமிழ் சரித்திரத்தை நிறைய ஆராய்ச்சி பண்ணி, அதைப் பற்றியே இப்போது கதைகள் நாவல்கள் கூட எழுத ஆரம்பித்திருந்தாலும், நான் விசாரித்துத் தெரிந்து கொண்ட மட்டில், தமிழ் மன்னர்கள் வேத சாஸ்திரங்களை ரொம்பவும் ஆதரித்துப் போஷித்தார்கள் என்பதை மட்டும் யாரும் எடுத்துச் சொல்வதாகத் தெரியவில்லை...''

துறவியாயிருந்தாலும் சகலகலா வல்லுனரான காஞ்சிப் பெரியவர்களை நேரில் தரிசிப்பவர்களுக்குக் கிடைக்கும் உள நிறைவு போல, இந்த நூலைப் படிப்பவர்களுக்கு அறிவு நிறைவு கிடைக்கும்.

— சோ. சிவபாத சுந்தரம்

தெய்வத்தின் குரல்: தொகுப்பாசிரியர்: ரா. கணபதி; பிரசுரம்: வானதி பதிப்பகம், சென்னை—17. விலை ரூ. 30/-

## Face to Face

உரையாடலில்
பங்கு பெறுவோர்:

ஜோதிஷ கலாநிதி டாக்டர் (ஸ்ரீமதி) கே. என். சரஸ்வதி, B.A., Med. Litt. A.I.A.A. (India), B.A.A. (U.K.), P.R.F. (USA) M.A.F.A. (USA), I.S.A.R.

குமாரி வேதா, B.A.




# ஜோதிஷத்தால் விதியை மாற்றமுடியுமா?

வேதா: ஜாதகத்தின் அடிப்படையில் நம் நாட்டில் சொல்லப்படும் ஜோஸ்யம் விஞ்ஞான ரீதியானதா? அல்லது சாஸ்திர ரீதியானதா?

சரஸ்வதி: இந்திய ஜோதிடத்தின் அடிப்படை விஞ்ஞான ரீதியானதுதான். ஹைட்ரஜனேயும் ஆக்ஸிஜனேயும் குறிப்பிட்ட விகிதத்தில் கலந்தால் தண்ணீ ராகும் என்று ரசாயன விஞ்ஞானம் சொல்வதுபோல், நமது ஜோதிட முறையிலும் கிரகங்களின் அமைப்பு, சஞ்சாரம் போன்ற பலவகைத் தகவல்களேயும் கொண்டுதான் பலன்களேக் கணிக்கின்றோம்... ஆனல் இது ஒரு Derived Science. மற்ற வகை 'சயன்ஸ்' போன்று அல்லாமல் ஜோதிடத்திற்கு சாஸ்திரீய சம்பந்தமும் உண்டு.

வேதா: விஞ்ஞான ரீதியும், சாஸ்திரீய சம்பந்தமும் இதில் எந்த விகிதத்தில் முக்கியத்துவம் பெறுகின்றன?

சரஸ்வதி: ஒருவருடைய பிறந்த நேரத்தைச் சரியாகக் கொண்டு அதன் படி அவருடைய ஜாதகத்தைத் துல்லியமாகக் கணக்கிட்டு அவரது ஜாதகப்படி கிரகங்களின் அமைப்பு, சஞ்சாரம், கிரகங்களால் அவருக்கு நிகழக்கூடிய விளேவுகள் ஆகியவற்றை விஞ்ஞான ரீதியாகவும், அந்த விளேவுகளுக்கான பரிகாரங்களே சாஸ்திர ரீதியாகவும் சொல்கிறோம்!




வேதா: ஜோதிடத்தால் சமுதாயத்துக்கு அப்படி என்ன பிரமாத நன்மை விளைகிறது? நமது ஹிந்து மத தத்துவத்தில் 'விதி'யின் மேல் நம்பிக்கையும், தெய்வ வழிபாட்டின். அவசியமும் வலியுறுத்தப்படுவதைக் காணும் போது ஜோஸ்யத்தில் எதிர்காலத்தைத் தெரிந்து கொள்வதால் என்ன பயன்? எதிர்காலத்தில் நடக்கப் போவதை நம்மால் தடுத்துவிட முடியுமா என்ன? இதனல் ஒருவனுடைய கவலே அதிகமாகலாம். இல்லாவிடின் அனாவசியமான எதிர்பார்ப்பால் நேரம் விரயமாகலாம்... அவ்வளவுதானே?

சரஸ்வதி: என்ன இவ்வளவு சாதாரணமாகச் சொல்லிவிட்டீர்கள். 'விதி' மேல் நம்பிக்கை எங்களுக்கும் உண்டு. ஆனல் ஜோதிட ரீதியாக ஒருவனுடைய வாழ்க்கையில் எதிர்காலத்தில் நிகழக்கூடிய விஷயங்களேக் கணித்து சாஸ்திர ரீதியா



''குழந்தைகள் ஆண்டு விழாவில் பேசினு யாமே! என்ன பேசினே?''

''ங்கா... உளு உளு உளாய்... இட்டாச்சி குவா குவா ங்கா... ஹம் ஹம்... ஆம்.. ஹம்...''

கப்பரிகாரம் செய்வதன் மூலம் விதிப்படி நடக்கவிருக்கும் செயல்களின் பாதிப்பின் தீவிரத்தை நிச்சயம் குறைக்க முடியும்!

வேதா: பரிகாரம் செய்வதால் விதியையே மாற்றிவிட முடியும் என்று சொல்கிறீர்களா?

சரஸ்வதி: கிரஹங்களின் சஞ்சாரத்தால் ஒருவருடைய வாழ்வில் ஏற்படும் இன்னல்களை அந்தக் குறிப்பிட்ட கிரகத்திற்குப் பரிகாரம் செய்வதால் முழுமையாக நிவர்த்தி செய்து விடவும், சில சமயங்களில் குறைக்கவும் நிச்சயம் வழி உண்டு. மூன்றுவதாக ஒருவகை எந்தப் பரிகாரத்தாலும் நிவர்த்திக்க முடியாத குறைகள். மூன்றுவது சொன்னதை வேண்டுமானால் 'விதி' என்று ஒதுக்கி விடலாமே தவிர, முதல் இரண்டுக்கும் பரிகாரங்கள் செய்து விடலாமே!

வேதா: பரிகாரம்னு எதைச் சொல்கிறீர்கள்?

சரஸ்வதி: ஒவ்வொரு கிரஹத்துக்கும் ப்ரீதி அளிக்கக் கூடிய அம்சங்கள் உண்டு. ஒருவருடைய ஜாதகப்படி எந்த கிரஹத்தில் அவருக்குப் பாதிப்புக்கள் வரவிருக்கின்றன என்று கணிக்கிறோமோ அதன் படி பரிகாரங்களைக் கூறுகிறோம்...

வேதா: ஜாதகத்தைக் கொண்டு ஜோதிடம் பார்த்து நமக்கு நேரவிருக்கும் பாதிப்புக்களைக் கணித்து அதற்காகத் தெய்வ பரிகாரம் செய்வதைவிட, நாம் பாட்டுக்கு ஆழ்ந்த தெய்வ நம்பிக்கையுடன் செயல்பட்டுக் கொண்டிருந்தால் இத்தகைய கஷ்டங்கள் தானே நீங்கி விடாதா என்ன? எதிர்காலத்தில் நிகழவிருக்கும் துன்பங்களைத் தெரிந்து கொள்வதால் மனக்கிலேசம் தானே அதிகமாகும்!

சரஸ்வதி: தெய்வ வழிபாட்டை மிஞ்சினது ஒன்றும் கிடையாது என்று ஒப்புக் கொள்கிறேன். ஆனல் பொதுவான தெய்வ வழிபாடு General Tonic சாப்பிடுவது போன்றது. குறிப்பிட்ட கிரஹத்தில் வரும் இன்னல்களை முன்பே கணித்து அக்கிரஹத்திற்கு ப்ரீதி செய்யும் விதத்தில் பரிகாரங்களைச் செய்வது Specialised Treatment போன்றது... ஆனல் ஒன்று... இதெல்லாம் சொல்லும் ஜோதிடரின் திறமையையும், நேர்மையையும் தெய்வ பக்தியையும் பொறுத்தது.

வேதா: நீங்கள் சொல்வது போல் எத்தனை பேர் இருக்கிறார்கள். 'எதிர்காலத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற மனிதனின் 'Basic Instinct' ஐ தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு வியாபார நோக்கில் செயல்படும் ஜோதிடர்கள்தான் நிறைய பேர் இருக்கிறார்கள்!

சரஸ்வதி: இதைப் பற்றி நான் ஒன்றும் அபிப்பிராயம் சொல்ல விரும்பவில்லை. ஜோதிடம் சொல்பவருக்கு 'Intution' (உள்ளுணர்வாகத் தோன்றும் கணிப்புத் திறமை) மிகமிக அவசியம்... அதோடு ஒவ்வொருவரது அணுகுமுறை ஒவ்வொரு விதமாக இருக்கலாம்...

வேதா: அணுகு முறை மாறுபட்டாலும் சொல்லப்படும் கணிப்பில் மாறுபாடு இருக்க முடியாதே... பத்திரிகைகளில் வரும் ஜோதிடத்தில் நாம் பிறந்த நக்ஷத்திரத்தின் அடிப்படையிலான ராசி பலன் ஒன்றாகவும், பிறந்த தேதியின் அடிப்படையிலான பலன் வேறு ஒன்றாகவும் காணப்படுகிறதே!

சரஸ்வதி: நக்ஷத்திரத்தின் அடிப்படையிலான ராசிபலன் நமது ஜோதிட முறையின் அடிப்படையிலும், பிறந்த தேதியின் அடிப்படையிலான ஜோதிட முறை மேலை நாட்டு வழிமுறையிலுமானது... நமது முறையில் கணிக்கப்படும் பலன்களே பத்திரிகைக்குப் பத்திரிகை மாறுபடுவதைக் காணலாமே... இத்தகைய முரண்பாட்டுக்குக் காரணம் ஒரு ஜோதிடருக்கும் இன்னொரு ஜோதிடருக்கும் உள்ள மாறுபாடான அணுகு முறைதான்... இது ஒரு பலவீனமான அம்சம்தான்... அதனல் தான் பலருக்கு ஜோதிட நம்பிக்கை சம்பந்தமான சந்தேகங்கள் வருகின்றன. அமெரிக்காவில் நடந்த அகில உலக ஜோதிடர்கள் சம்மேளனத்திற்கு இந்தியாவின் ஒரே பிரதிநிதியாகச் சென்ற ஆண்டு சென்றிருந்தேன். அங்கே ஜோதிடம் முறையாகப் பயில்விக்கப்பட்டு, பயிற்சி முடிந்ததும் பட்டம் வழங்கப்படுகிறது. ஜோதிடத் தொழிலைச் செய்ய விரும்புவோர் அங்கே லைசென்ஸ் பெற வேண்டும். நம் நாட்டிலும் ஜோதிடத்தை முறைப்படியான கல்வியாகப் பயில்விக்கவும் ஜோதிடத் துறையை முறையானதாகச் சீர்ப்படுத்தவும் முயற்சிகள் எடுத்து வருகிறோம்...

வேதா: ராகு காலம், யம கண்டம் பற்றி உங்களது கருத்து என்ன?

சரஸ்வதி: இவை சிலாக்கியமான நேரங்கள் இல்லைதான்...

வேதா: நம்பிக்கை இல்லாதவர்களுக்கு...?

சரஸ்வதி: ஜோதிஷமே நம்பிக்கை உள்ளவர்களுக்குத்தான்...

வேதா: சற்றுத் தீவிரமான கேள்வி.. ஜாதகப் பொருத்தம் பார்த்து ஒரு பெண்ணுக்கும் பையனுக்கும் திருமணம் செய்து வைக்கின்றனர். திருமணமான சில மாதங்களிலேயே கணவன் திடீரென இறந்து விடுகிறான்... இதனால் ஜோதிடம் பொய்யாகிறதே!

சரஸ்வதி: பெண் வீட்டார், பிள்ளை வீட்டார் முக தாட்சண்யத்தைப் பார்க்காமல், சரியாகக் கணிக்கப்பட்ட மணப்பெண், மணமகன் ஜாதகங்களைக் கொண்டு துல்லியமான கணிப்புகளைத் திறமையான ஜோதிடர் கணக்கிட்டால் இந்த அசம்பாவிதத்தைத் திருமணத்திற்கு முன்பே நிச்சயம் கண்டுபிடித்து விட முடியும்! கிரஹ சாந்திகளால் நிவர்த்திக்கக் கூடிய விளைவானால் அதனை நிவர்த்தியும் செய்ய முடியும்... இல்லாவிடின் இந்தத் திருமணத்தைத் தவிர்க்கச் சொல்லியுமிருக்கலாம்...

வேதா: 'திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயமாகின்றன' என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள் என்று நினைக்கிறேன். அப்பெண்ணும் பிள்ளையும், மணம் செய்து கொண்டு, அவள் குறுகிய காலத்தில் கணவனை இழக்க வேண்டும் என்று 'விதி' இருக்கும்போது உங்களைப் போன்ற ஜோதிடர்களால் என்ன செய்ய முடியும்?

சரஸ்வதி: நான்தான் முன்பே சொன்னேனே! பரிகாரத்தாலும் தீர்க்கமுடியாத விளை உண்டு என்று...

வேதா: பிறந்த நேரம் ஐந்து நிமிடம் தவறினாலும் ஜாதகம் மாறிவிடும் என்பது பற்றி என்ன சொல்கிறீர்கள்?

சரஸ்வதி: அந்த நேரத்தில் 'லக்ன சந்தி' இருந்தால்தான் ஜாதகம் மாறும்.

வேதா: கிரஹண காலங்களில் சாப்பிடக் கூடாது, கர்ப்பிணிகள் வெளியே வரக் கூடாது என்பது பற்றி உங்கள் கருத்து?

சரஸ்வதி: அமாவாசை, பௌர்ணமி, கிரகண காலம் போன்ற சமயங்களில் மனநிலை பாதிப்பு நோயாளிகள் தீவிரப் பாதிப்பு அடைவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம்... கிரஹண காலம் அவ்வளவு நல்ல நேரம் இல்லைதான்... நீங்கள் சொன்னவற்றைத் தவிர்ப்பதே நலம்.

வேதா: 'பெண் மூலம் நிர்மூலம்' 'பூராடம் நூலாடாது' போன்று வழக்கில் இருந்து வரும் சொற்கள் பற்றி உங்களது அபிப்பிராயம் என்ன?

சரஸ்வதி: சில நட்சத்திரங்கள் சில விஷயங்களில் சிலாக்கியமானவையாக இல்லாவிடினும் கூட இம்மாதிரி பொதுப்படையாக ஒதுக்கிவிட முடியாது. ஒவ்வொருவரின் ஜாதகத்தின் அடிப்படையில் ஆராய்ந்துதான் பலன்களைக் கணிக்க வேண்டும்... சில விளைவுகளை நிவர்த்திக்கப் பரிகாரங்கள் இருக்கும்போது இம்மாதிரி பொதுப்படையாகக் கூறுவது சரியல்ல.

பேட்டி : நாகசன்

போட்டோ : மன்னை மூர்த்தி

# கிரிக்கெட் கற்கலாம்! 22

கோச் : கே. சந்திரசேகர்

படம் : ராஜ்.. தயாரிப்பு : குன்றுமணி





# வட்ட மேஜை

''கதை கட்டுரைகளைத் தபாலிலேயே அனுப்புங்கன்னு கேக்க மாட்டீங்க; ஆசிரியரை நேரில்தான் பார்த்துக் கொடுக்கணும்னு அப்படியே செய்யுங்க!''

★

● நீண்ட நாளைக்குப் பிறகு நீண்ட பெயரில் (கதையின் தலைப்பு) புகழில் நீண்ட எழுத்தாளர் ஜெயகாந்தன் தொடர்கதையைப் படித்த போது கடந்த வாரம் சாப்பிட்ட பொங்கலும் சுவைத்த கரும்பும் இக்கதை இனிமைக்குமுன் எம்மாத்திரம் என்ற நீண்ட கேள்விக் குறியை எழுப்பி விட்டது.
விழுப்புரம் க. கோபு.

● ஜெயகாந்தனின் நாவல் ஆரம்பம், பழைய கால குடும்பம் ஒன்றை அப்படியே கண்முன் நிறுத்துகிறது. பாட்டிமார்களும் பேத்திமார்களும் தலைப்பும், அக்காமார்களின் இடையில் பெண்ணாக அலங்கரித்து நிற்கும் சிங்காரத்தின் அழகும் (ஓவியர் கோபுலுவின் தத்ரூபமான கைவண்ணத்துடன்) களைகட்டுகிறது. இவர்களுக்கிடையில், 'சரியான பொம்பளே, ஒரு நிஜம் ராணி' பிரவேசிக்கப் போவதை ஆவலுடன் எதிர்பார்க்கிறோம்.
விழுப்புரம் பிரேமா சுப்பிரமணியம்

● ஜெயகாந்தனின் 'பாட்டிமார்களும் பேத்திமார்களும்' முதல் அத்தியாயத்தைக் கல்கியில் படித்து அதிர்ச்சியடைந்தேன்.

'இந்த நேரத்தில் இவள்' என்ற தலைப்பில் தினமணி கதிரில் வெளிவந்த நாவலே பெயர் மாற்றப் பட்டுள்ளது. அதன் முதல் அத்தியாயமே மீண்டும் பிரசுரமாகியுள்ளது.

இதென்ன...?
திருப்பூர் ஜானகி சுப்ரமணியம்

● ஜெயகாந்தன் அவர்களின் ''பாட்டிமார்களும், பேத்திமார்களும்,'' என்ற நாவல் சில வருடங்களுக்கு முன் தினமணி கதிரில் வெளியாகி முடிவு பெறாமலேயே இடீரென நின்று விட்ட நாவல். இதனை மீண்டும் படிப்பதில் ஆர்வம் உள்ளவர்களாக இருக்கிறோம். இந்த நாவலை வெளியிடும் தங்களுக்கு நன்றி.
கள்ளக்குறிச்சி ரேவதிசிவகுமார் மற்றும் நால்வர்.

● ஜனதா அரசைத் தாக்கித் தாங்கள் எழுதிய 'தலையங்கம் ' கண்டு அதிர்ச்சியுற்றேன். 'எமர்ஜென்சி' ஆட்சியின் போது மத்திய அரசு ஊழியர்களுக்குப் பத்துத் தடவை பஞ்சப்படி உயர்வு கொடுக்கப் பட்டது. ஆனால் ஜனதாவின் இரண்டாண்டு ஆட்சியில் ஒரே தடவைதான் உயர்வு அளிக்கப்பட்டது. இரண்டாவது உயர்வு எதிர் பார்க்கப்படுகிறது. சென்ற முப்பது ஆண்டுகளில் இம்மாதிரி விலைவாசியில் ஸ்திரத் தன்மை இருந்ததே கிடையாது.
சென்னை—5 கே. வரதராஜன்

● மெத்தனமே, உன் பெயர் ஜனதாவா?' என்ற தலையங்கம் வெகு ஜோர். பல விஷயங்களைத் தெளிவாக எழுதியிருக்கிறீர்கள்? பாராட்டுக்கள்.

விடுபட்டுப்போன சில விஷயங்கள் : கள்ள மார்க்கெட்டில் சிமெண்ட் விலை ரூ. 40 - ஏஜண்ட்களிடம் கேட்டால் இருப்பு இல்லை என்கிறார்கள். ரூ. 40- க்கு 100 மூட்டை கூடத் தரத் தயாராகஇருக்கிறார்கள், ஏஜண்ட்களின் தரகர்கள். அரசு தன் அதிகாரத்தை நிலைநாட்ட முடியவில்லை என்பதற்கு இதைவிடச் சான்று வேறில்லை.

அன்றாடத் தேவையான புளி, கறிகாய் விலை தாறுமாறாக ஏறியிருக்கிறது. 1 கிலோ விலை ½ கிலோவுக்குக் கொடுக்க வேண்டியிருக்கிறது. குறைந்த வருமானம் உள்ளவர்களும், பெரிய குடும்பம் உள்ளவர்களும் திணறும் நிலை உள்ளது.
சென்னை—82 ஆர். வைத்தியநாதன்

● ஃபுட்போர்டில் தொங்கிக் கொண்டு, பரீட்சை ரிசல்ட்டுக்காக மட்டும் சாமியை வேண்டிக் கொண்டு, பார்க்கின்ற பெண்களை யெல்லாம் காதலித்துக் கொண்டு கற்பனை சந்தோஷத்தில் மிதக்கும் இளைஞர்களுக்கு, யதார்த்த வாழ்க்கையைத் துல்லியமாகக் காட்டி, அவர்கள்தம் கடமைகளை அவர்களுக்கு நினைவுபடுத்தும் வகையில் சிறு கதைகள் பிரசுரிக்கும் 'கல்கி'யின் பணி பாராட்டுதற்குரியது. வாஸந்தியின் 'வாலிபத்தின் பார்வையில்' பதினேழின் படபடப்பு நன்கு சித்திரிக்கப்பட்டுள்ளது.
விருத்தாசலம் ஜி. பாலசந்தர்.

● எங்கள், கல்லூரியிலேயே (குருநானக் கல்லூரி கிண்டி) தமிழில், பல்கலைக் கழகத்தின் முதல் மாணவனாக நான் தேறியதற்குக் காரணம் சிலம்புச் செல்வமே! பாடத்தில் குறிப்பிட்ட செய்யுள்களன்றி, ஒவ்வொரு வாரமும் கல்கியிலிருந்து முக்கிய செய்யுளெடுத்துத் தொகுத்தெழுதிச் சிறப்புநிலைத் தகுதி பெற்றேன்! என் வெற்றிக்கு உதவிய கல்கியும், ம. பொ. சியும் நெடுநாள் நிலைத்து வாழ இறைவனை இறைஞ்சுகின்றேன்!
சென்னை—41 எஸ். ராதாகிருஷ்ணன்

● 21.1.79ம் தேதிய 'கல்கி' இதழில் 'வட்டமேஜைப் பகுதியில் மதுரை—9 எஸ். பாலகிருஷ்ணன் குறிப்பிட்டுள்ள இரண்டு படங்களும் மதுரையில் 100 நாட்கள் ஓடவில்லை. எஸ். பி. முத்துராமன் கலந்து கொண்ட விழா 'மோகம் முப்பது வருஷம்' படத்தின் 75வது நாள் விழாதான்.
மதுரை—11 சக்திநாயனார்

● ஆறுதல் பரிசான சுகின் டயரி இன்று வந்து சேர்ந்தது. அழகிய தங்க விக்னேஸ்வரர் உருவத்திற்காகவே, டயரியின் உறையை என்றென்றும் பத்திரப்படுத்தி வைப்பேன்.
சேலம்—5 கலோ சாரி.

'ஸைக்ளாப்ஸ்' என்பதுதான் அந்த மாபெரும் பஸ்ஸின் பெயர். அணு சக்தியால் ஓடும் இந்தப் பிரும்மாண்டமான நூதன வண்டியை நியூயார்க் நகரத்திலிருந்து டென்வர்வரை பரிசோதனை ஓட்டமாக இரு சிறந்த டிரைவர்கள் ஓட்டிச் செல்கிறார்கள்.

அணு சக்தியால் பஸ்கள் ஓட ஆரம்பித்துவிட்டால், பெட்ரோல் கம்பெனிகள் வீழ்ச்சியடையும் என்ற அச்சத்தில் இதை அழிக்கத் திட்டமிடுகிறது ஒரு கோஷ்டி. இவர்களின் சூழ்ச்சியிலிருந்து விடுபட்டுத் தன் பிரயாணத்தை 'ஸைக்ளாப்ஸ்' எப்படித் தொடருகிறது என்பதே படக்கதை.

இந்தப் பூதாகாரமான பஸ்ஸில் பலவகைப்பட்ட பிரயாணிகள் எதிரிகளால் வகுக்கப்படும் திட்டங்களையெல்லாம் தவிடுபொடியாக்கி முன்னேறிச் செல்கின்றனர். 'பிக் பஸ்' படத்தில் காதல் உண்டு, திகில் உண்டு சிரிப்பும் உண்டு.

த. மூ. ரா



## இப்படியும் நடந்தது!

பஸ்ஸில் ஒரே கூட்டம். அந்தக் கிழவிக்கு உட்கார இடம் கிடைக்கவில்லை. கிழவி நிற்க முடியாமல் தவித்தாள். அதைப் பார்த்த ஒரு யுவதி எழுந்திருந்து தன் இடத்தைக் கிழவிக்குக் கொடுத்தாள். சிறிது நேரத்துக்குப் பிறகு அந்தப் பெண் பஸ்ஸிலிருந்து இறங்கும்போது அந்தக் கிழவி அவளுடைய பைக்குள் ஒரு காகிதத்தைத் திணித்தாள். அந்தப் பெண் 'அது என்ன' என்று பார்ப்பதற்குள் பஸ் போய்விட்டது. அது என்ன காகிதம்? ஒரு 1000 டாலர் நோட்டு! இது நடந்தது நியூயார்க்கில்.

காரவான் — சரோஜா ராமச்சந்திரன்.

## அவர் அதிர்ஷ்டம்!

காரல் மார்க்ஸின் மார்க்ஸீயம் பற்றி இன்று பலர் பலவிதமான விளக்கங்கள் அளித்து வருகிறார்கள். இத்தகைய விளக்கங்கள் ஒன்றுக்கொன்று முரண்பாடாகவும் இருப்பது உண்டு. இத்தகைய விசித்திர விளக்கங்கள் காரல் மார்க்ஸ் உயிரோடு வாழ்ந்த காலத்திலேயே இருந்தனவாம். இத்தகைய விளக்கங்களைப் படித்து விட்டு மார்க்ஸ் சொன்னதாவது: "அதிர்ஷ்ட வசமாக நான் ஒரு மார்க்ஸிஸ்டாக இல்லை!"

வெள்ளகால் இரா. கந்தையா.




✕ மறைமலை நகரில் சர்வதேச சாரணர் முகாமைப் பிரதமர் தேசாய் துவக்கி வைத்து அணி வகுப்பைப் பார்வையிடுகிறார்.

# சாரணர் உலகம் சாதாரணம் அல்ல!

**கா**ட்டாங்குளத்தூரில் புதிதாக அமைக்கப்பட்டு வரும் மறைமலை நகரில் சாரணர்களின் சர்வதேச எட்டாவது தேசிய முகாமுக்குச் செல்கிறோம். வாசலிலேயே சாரண சாரணியர் நம்மை வரவேற்கிறார்கள். ஒரு மினி உலகம் இங்கே உருவாகி விட்டது போன்ற பிரமிப்பு ஏற்படுகிறது. இதுபோன்ற சர்வதேச சாரணர் முகாம் நான்கு வருடங்களுக்கு ஒருமுறைதான் நடக்கும். இதில் இந்தியாவைச் சேர்ந்த முப்பத்தாறு மாநிலங்களும், பன்னிரண்டு வெளி நாடுகளும் பங்குகொள்கின்றன. இந்த முகாமுக்காக இருபத்தோராயிரம் சாரணர்கள் வந்துள்ளனர். கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் பல நாட்டுக் கொடிகளைப் பறக்க விட்டுக்கொண்டிருக்கும் கூடாரங்களைக் காண முடிகிறது.

மாநில தலைமை ஆணையாளர் திரு சிட்டிபாபு கூறுகிறார்: ''ஓர் இளைஞனின் குண நலப்பண்புகளை வளர்த்து தேசிய உணர்வுடன் மற்றவர்களுக்காகவும் தாய்நாட்டுக்காகவும் அவனை உழைக்கச் செய்வதே சாரணர் படையின் குறிக்கோளாகும். இது போன்ற முகாம்களினால் நம் இளைஞர்களுக்குப் பல அயல்நாட்டினரைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைக்கிறது. தாழ்வு மனப்பான்மை அகன்று திறமைகளை வெளிப்படுத்தவும் பிறர் ஆற்றலை உணரவும் முடிகிறது. இங்கு வரும் சாரணர்களுக்குப் பயிற்சி கொடுப்பது மட்டுமில்லாமல் அவர்களிடம், வீர உணர்வை ஏற்படுத்தவும் உதவுகிறோம். இங்கு ஜாதி, மத, இன, மொழி பேதம் கிடையாது. எல்லோரும் சம அந்தஸ்து உடையவர்கள். இளம் சாரணர்களுக்குத் தொலைதூரச் செய்தி அனுப்பும் முறை, ஆறுகள் கடக்கத் தாற்காலிகப் பாலம் அமைக்கும் விதம், முதலுதவி, பல பொருள்களைத் தயாரிக்கும் விதம் காடுகளில் கூடாரங்களை அமைக்கும் முறை ஆகியவற்றில் பயிற்சி அளிக்கிறோம். அத்துடன் கிராமங்களுக்குச் சென்று ஏழைகளுக்கு எழுத்தறிவித்து உதவுவது போன்ற சமூக சேவைகளைப் புரியவும் இங்கு பயிற்சி அளிக்கிறோம். பதின்மூன்று வயதான பிறகுதான் ஒரு சாரணன் இது போன்ற முகாமில் கலந்து கொள்ளலாம். ஒருமுறை சாரணனானவன் இறக்கும்வரை சாரணராக இருந்து தொண்டு செய்யலாம். ஒரு சாரணன் தினமும் ஒரு நல்ல காரியமேனும் செய்ய வேண்டும்.''

தமிழ் நாட்டைச் சேர்ந்த ஒரு பெண் சாரணர் கூறுகிறார்: ''இங்கு நாங்களே கூடாரங்களை அமைத்துள்ளோம். ஒரு கூடாரத்துக்கு ஆறுமுதல் எட்டு நபர்கள் உண்டு. முகாமில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து இருந்தாலும் எங்கள் இருப்பிடங்கள் இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்தவர்கள் தாமாகவே தமக்குத் தேவையானதைச் சமைத்துக் கொள்கிறார்கள்.''

ஜப்பான் நாட்டைச் சேர்ந்த இளைஞர் கூறுகிறார்: ''பொங்கலன்று வழக்கமான எங்கள் உணவுடன் சர்க்கரைப் பொங்கலும் தயார் செய்து சாப்பிட்டோம். எங்கள் அனைவருக்கும் ரொம்பப் பிடித்திருந்தது. பல்வேறு சாரணர்களின் திறமைகளை வெளிக்காட்டத் தினமும் நடக்கும் 'ஸ்கில்லோ ராமா' (Skillo Rama) என்ற நிகழ்ச்சி மிகவும் உதவுகிறது. இரவு நாட்டுப்பாடல், நடன நிகழ்ச்சிகளில் பல்வேறு நாட்டவரின் கலைத் திறனைப் பார்க்க முடிகிறது. மிகவும் கஷ்டப்பட்டு ஆங்கிலத்தில் பேசினார் ஜப்பானிய இளைஞர்.

பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்த சாரண சாரணியர் தமது கைத்திறத்தினால் உருவாக்கிய கலைப் பொருள்களைப் பொருட்காட்சியாக அமைத்திருந்தனர். பல மாநிலங்களைச் சேர்ந்தவர்கள், தத்தமது பிரதேசங்களின் கிராம வாழ்க்கை முறைகளை விளக்குகின்றனர்.

சாரணர் உலகம் சாதாரண உலகமல்ல; சர்வ தேசங்களிலும் சாதனைகளை நிகழ்த்தப் போகிற சங்கம் என்ற நினைப்புடன் முகாமிலிருந்து திரும்பி வந்தேன்.

பேட்டி: ''கிக்கி''



# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி

சீக்கிரமே பள்ளிகள் எழுந்தன. ஆசிரம வாசிகளின் குழந்தைகளுக்கும் சுற்றுப்புறத்தில் உள்ள கிராமங்களில் வளரும் குழந்தைகளுக்கு மாக முதலில் புதுப்பாளையத்தில் ஒரு பள்ளி உருவாயிற்று. ஸி. ஆர் தான் உபாத்தியாயர். பின்னர் பல்வேறு கிராமங்களில் உள்ள தீண் டாதார் குடியிருப்புப் பகுதிகளில் பள்ளிகள் நிறுவப்பட்டன. இவற்றில் தீண்டாதார் குழந்தைகளும் மற்ற குழந்தைகளும் சேர்ந்து படிக்க வேண்டும் என்று ஆசிரமவாசிகள் எடுத்துக் கொண்ட முயற்சி பகுதி அளவே வெற்றி பெற்றது.

பாழுங்கிணறுகள் புதுப்பிக்கப்பட்டன. புதிய கிணறுகள் தீண்டாதார் வாழ்ந்த பகுதிகளில் தோண்டப்பட்டன. எங்கு கிணறு தோண்டினால் நீர் இருக்கும் என்று கண்டு பிடிப்பதில் ஆற்றல் உடைய ஒருவர் ஆசிர மத்தில் சில காலம் பொறுத்து வந்து சேர்ந்து கொண்டது ஓர் அதிர்ஷ்டம். வாரம் ஒருமுறை ஆசிரமவாசிகள், தேர்ந்தெடுக்கப்பட்ட சில கிராமங்களுக்குச் சென்று அங்குள்ள தீண் டாதார் குழந்தைகளைக் குளிப்பாட்டி உணவு கொடுத்தனர். சுற்றுப் புறங்களைச் சுத்தமாக வைத்துக்கொள்ளத் தீண்டாதாருக்குக் கற் றுக் கொடுத்தனர். ஓரளவு வைத்திய உதவி யும் ஆசிரமத்தில் வழங்கப்பட்டது. டாக்டர் ஒருவர் ஆசிரமவாசியாக வந்து சேரும்வரை ஸி. ஆரே பல சில்லறை நோய்களைக் கண்டு பிடித்து மருந்து அளித்து வந்தார்.

இருப்பினும் இவற்றையெல்லாம் பாராட்டி மகிழ்வோர் அதிகம் பேர் இருக்க வில்லை. 1925ல் கோடைமழை பொய்த்த போது மக்கள் அறியாமையுடன் துவேஷமும் சேர்ந்து கொள்ள ஸி. ஆர். மீதும் சர்க்கா மீதும் பழி சுமத்தினர்! ஸி. ஆர். எங்கு சென்றாலும் கடுமையான பஞ்சத்தையே கண்டார். ''இலைகளை வெட்டி விறகுக்கு விற்று விட்டதால் சாலையோர மரங்களெல் லாம் கூட மொட்டையாக நிற்கின்றன'' என்று அவர் தேவதாஸுக்கு எழுதினார்.1

ஆசிரமத்தின் மீது கிராம மக்களுக்கு இருந்த துவேஷம் படிப்படியாகக் குறைந்தது. காரணம், அதிகாரிகளுக்குத் தாங்கள் எழுத வேண்டிய கடிதங்களை ஸி. ஆரும் அவரது நண்பர்களும் எழுதித் தருவார்கள் என் பதையும் தங்களுடைய உட்பூசல்களைத் தீர்த்து வைப்பார்கள் என்பதையும் அதிகார வர்க்கத்துடன் தங்களுக்கு உள்ள தகராறு களில் தங்கள் சார்பில் நியாயவாதம் செய் வார்கள் என்பதையும் அவர்கள் உணர்ந்தது தான்.

ஒரு சமயம் மொளிபள்ளி கிராமத்தைச் சேர்ந்த பல ஆண்களையும் பெண்களையும் ஒரு குற்றத்துக்கு உடந்தையாக இருந்த தாகக் கூறிப் போலீஸார் கைதாக்கித் திருச் செங்கோடு லாக் அப்பில் வைத்தனர். பிறகு அவர்களிடம் லஞ்சம் வாங்கிக் கொண்டு விடுவித்து விட்டனர். அவரவர் சக்திக்கு ஏற்ப ரூ 20 முதல் ரூ 200 வரை லஞ்சம் தர வேண்டியிருந்தது. இப்படி துன்பமடைந் தவர்கள் ஸி. ஆரிடம் தங்கள் கதையைக் கூற, ஸி. ஆர்., அவர்களிடம், ''போலீஸார் தங்கள் கோபத்தைக் காட்டினாலும் நீங்கள் உண்மையே பேசுவதென்பதில் உறுதியாக இருப்பீர்களா?'' என்று கேட்டார். அவர்கள் அவ்வாறே சத்தியம் செய்தார்கள். எல்லா ரிடமும் கையெழுத்து அல்லது கைநாட்டுடன் கூடிய வாக்குமூலத்தைப் பெற்றுக்கொண்ட ஸி. ஆர்., திருச்செங்கோடு போலீஸ் அதி காரிக்கு ஓர் எச்சரிக்கை அனுப்பினார். லஞ்சம் வாங்கப்பட்ட பணம் அத்தனையும் உடனே திருப்பித் தந்து மன்னிப்பும் கோரவில்லை யானால் உயர் அதிகாரிகளுக்குத் தாம் விஷ யத்தைத் தெரிவித்து விடப் போவதாக அந்த எச்சரிக்கையில் கண்டிருந்தது. லஞ்சமாகப் பெற்ற தொகைகள் உடனடியாகத் திருப்பித் தரப்பட்டன. மன்னித்து விடுமாறு போலீ ஸார் கெஞ்சினர். கிராம மக்களிடையே ஆசிரமவாசிகளின் மதிப்பு ஆகாயமளாவ உயர்ந்தது.2

ஒருநாள் ஏணி வைத்து ஏறி, தமது குடிலின் புகைப்போக்கி மீதாக ஒரு வலையைப் பொருத்திக் கொண்டிருந்தார் ஸி. ஆர். பூனை இரவில் உள்ளே வராமலிருக்க இந்த ஏற்பாட்டைச் செய்து கொண்டிருந்த அவ ரிடம், பதின்மூன்று வயதான லக்ஷ்மி, ''சின்னான்தான் இருக்கிறானே, அவன் இந்தக் காரியத்தையெல்லாம் செய்யக் கூடாதா? கீழே விழுந்து அடிபட்டுக் கொள்ளப் போகி றீர்கள்!'' என்றாள். ''அப்போ, சின்னான் கீழே விழுந்து அடிபட்டுக் கொண்டால் பாதகமில்லையாக்கும்'' என்று ஸி. ஆர் திருப்பிக் கேட்டதன் மூலம், மனிதர்களி டையே ஏற்றத்தாழ்வு இல்லை என லக்ஷ் மிக்கு நினைவூட்டினார். சின்னான் வண்ணார் வகுப்பைச் சேர்ந்தவனாயிருந்த போதிலும்

---

1. ஸி. ஆர். தேவதாஸ் காந்திக்கு எழுதியது. 14-8-25, தேவதாஸ் காந்தி தாள்கள்
2. கே. சந்தானமும், திருச்செங்கோடு ஆர். வேங்கடராமனும் கூறியது

வி. ஆரால் சமையல் காரராக நியமிக்கப் பட்டிருந்தான்.

வி. ஆர். யாருக்குமே இடம் கொடுத்துக் கெடுப்பவரும் அல்ல. நூல் நூற்றுப் பிழைத்த சகன் என்ற முஸ்லீம், ஆசிரமத்தின் ஆரம்பக் கட்டத்திலேயே வந்து சேர்ந்து விட்டவன். அவன் கூறுவான்: ''பெரிய ஐயா ரொம்பக் கண்டிப்பானவர். அதனால் அவரவரும் தத் தமக்கு ஒதுக்கப்பட்ட வேலைகளை ஒழுங்காகச் செய்து முடித்து விடுவார்கள்.''3

''உன் கைநாட்டை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன்; உன் பெயரை எழுதத் தெரிந்து கொள்'' என்று வி. ஆர். சின்ன கவுண்ட னிடம் சொன்னார். ஆசிரமத்தில் மாட்டு வண்டி ஓட்டியவன் சின்ன கவுண்டன். அவனுக்கிருந்த கடனெல்லாம் படிப்படியாக அடையவும் அடகு வைத்திருந்த நிலத்தை மீட்டுக் கொள்ளவும், அவனுடைய குடும்ப வாழ்க்கையின் தரம் உயரவும் வி. ஆர். உதவினார்.4

வி. ஆரும் மற்றவர்களும் எந்தக் கொள் கைகளைப் பிரசாரம் செய்தார்களோ, அவற்றை ஆசிரமத்தில் நடைமுறையில் செயல்படுத்தியும் காட்டினார்கள். ஏழை களுக்குத் தங்களை அர்ப்பணித்துக் கொண் டதில் வி. ஆரும் நண்பர்களும் நிறைய பிரதிபலன் அடைந்தார்கள். எளியவர்களின் வாழ்க்கையைப் புரிந்து கொண்டு பாராட்டி னார்கள். அவர்களை மதித்து அன்பு செலுத் தினார்கள். 1926 ஜனவரி முதல் வி. ஆர். எழுதி யங் இந்தியாவில் தொடர்ந்து பிரசுர மான சிறுகதைகளும் சம்பாஷணைகளும் சமு தாயத்தின் அடிமட்டத்தில் இருப்பவர்களு டைய வாழ்க்கை பற்றிய ஆழ்ந்த உள்நோக்கு அவருக்கு இருப்பதைப் புலப்படுத்தின.




## 24

ஆசிரமம் திறந்து ஆறு வாரங்களுக்குப் பிறகு மகாதேவதேசாய் உடன் வர மகாத்மா விஜயம் செய்தார். தேசாய்க்கு அது அமைதி யான சூழ்நிலையுடன் கூடிய மிக அழகிய இடமாகத் தோன்றியது.5

பஞ்சு வாங்கிக் கொள்வதற்காக ஆசிரமத் துக்குள் படையெடுத்து வந்து கொண்டே இருந்த பெண்களைப் பார்த்து காந்தி வியந் தார். ஒரு சின்ன அன்புப் பணி, ஒரு சிறிய மனிதாபிமானப் பணி இந்தத் தீண்டாதாரை ஆசிரமத்தின் ஓர் அங்கமாக்கி விட்டதை அவர் உணர்ந்தார்.

''அவர்கள் ஆசிரமத்தில் உள்ளவர்களைப் போலவே அதே அளவு புத்திசாலிகள்; அன் புக்குத் தகுதியுடையவர்கள்'' என்றார் அவர். ''ஆசிரமத்தில் உள்ள உயர்ந்த பிராம ணர்களைப்போல அதே அளவு சுத்த மானவர்கள், ஆண்டவனிடம் பயபக்தி உள்ளவர்கள்.''6

சபாபதி கவுண்டரின் வீட்டில் எல்லாப் பெண்களும் தாங்களே நூற்ற நூலிலிருந்து நெய்யப்பட்ட கதர் ஆடையை அணிந் திருந்தனர். கதர், மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு ஆகியவற்றில் கவுண்டர் காட்டிய ஆர்வம் மகாத்மாவுக்கு மிகவும் திருப்தி தந்தது. ''சபாபதி கவுண்டரின் உயர்ந்த முன் உதாரணத்தை நாம் எல்லோரும் பின் பற்றலாம்'' என்று அவர் திருச்செங்கோடு கூட்டம் ஒன்றில் பேசினார்.7

* * *

இந்தச் சந்தர்ப்பத்தில் திருவிதாங் கூரில் தீண்டாமையை எதிர்த்து நடந்த போராட்டத்தில் கிடைத்த பகுதி அளவு வெற்றியில் வி. ஆருக்குப் பங்கு இருந்தது.

கிட்டத்தட்ட ஓராண்டு காலமாக வைக் கம் சத்தியாக்கிரஹம் நடந்து கொண் டிருந்தது. அங்கே தீண்டாதார் கோயிலுக்குள் செல்ல முடியாது என்பது மட்டுமல்ல; கோயிலை நோக்கிச் செல்கின்ற தெருக்களில் கூட நடக்கக் கூடாது. கல்வி அறிவு உள்ள ஈழவர்களும் தீண்டாதாராகவே கருதப் பட்டனர்.

தடை விதிக்கப் பட்டிருந்த தெருக்களில் தொண்டர்கள் நுழைந்து கைதாயினர். அரசு, ஆசாரத்தையே ஆதரித்தது. ஆங் காங்கே தடுப்புக்கள் எழுப்பப்பட்டன. போலீஸார் கோயிலைச் சூழ்ந்து நின்றனர்.

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்



3. ராஜாஜி - 93, பக்கம் 236C
4. சின்ன கவுண்டர் நூலாசிரியரிடம் கூறியது
5. மகாதேவ தேசாயின் டயரி, சர்வசேவா சங்கம் வாரணாசி, பாகம் 6. பக்கம் 134
6. மேற்படி பக்கம் 141
7. மேற்படி


வெண்மை ஒளிவீசிப்
பளிச்சிடும்
பார்த்தவரெல்லாம் கூறுவர்...
இது
டெட்
டிடர்ஜெண்ட்
கட்டியின்
சலவை
Supreme
det
detergent washing cake
Shilpi DM 35A/78 Tam

# கனவா, நிஜமா? 6

கதை: வாண்டுமாமா
சித்திரம்: செல்லம்





கண்டது கனவேயென்பது நெஞ்சுக்குச் சமாதானத்தைக் கொடுத்தாலும் ஒரு காட்சி சலனத்தைத் தருகிறது.
அதிசயம்...! நேற்றிரவு நான் கண்ட கனவுக் காட்சியிலும் இங்கு ஒரு நெடுந்துயர்ந்த மரமிருந்தது. ஆனால் நிஜத்தில் இதோ இங்கே இருப்பதோ சின்னஞ்சிறிய இளங்கன்று. இந்தச் செடி கனவில் கண்ட மரமாக வளரப் பத்தாண்டுகளாகும்... அப்படியானால் கனவு பலிப்பதற்கான சாத்தியக் கூறுகள் உள்ளதோ?
பல நாட்களுக்குப் பிறகு நீலன் தன் குடும்பத்தாருடன் தலைநகருக்குப் போகிறான். மன்னர் வஜ்ரபாகு ஆண்டுதோறும் தான் முடிசூட்டிக் கொண்ட நாளை விமரிசையாகக் கொண்டாடுவது வழக்கம். அந்தக் கோலாகலங்களைக் காண மக்கள் வெள்ளமெனக் கூடுவார்கள் தலைநகரிலே.
அதோ வருகிறது, தேர்வலம்... நாம் இன்னும் முன்னே போவோம்.
விழாவின் முக்கிய அம்சம் பலருக்குப் பதவி உயர்வும் பட்டமளிப்பும் அறிவிக்கப்படும். அதன்படி...
தளபதி தந்தவக்த்ரரே! உம் வீரத்தை மெச்சினேன். மாயாபுரியின் அனைத்துப் படை அணிகளுக்கும் உம்மைப் பிரதம சேனாபதியாக்குகிறேன். உமது பாதுகாப்பில் மாயாபுரி மக்கள் பயமின்றி வாழட்டும்.
நீலனுக்கு உடல் புல்லரித்தது. தான் பல நாட்களுக்கு முன்பு கனவில் கண்ட அதே காட்சி நிஜமாக நிகழ்வதைப் பார்த்த பரபரப்பில் தன்னை அறியாமல் கத்திவிட்டான்.
தளபதி தந்தவக்த்ரர் ஒரு சூழ்ச்சிக்காரர். நம்பிக்கைத் துரோகி. மன்னவா! உங்களையும் உங்கள் குடும்பத்தாரையும் அழித்துவிட்டுத் தானே அரசுகைச் சிங்காசனமேறப் போகிறார் இந்த தந்தவக்த்ரர்...
சட்டென்று நாக்கைக் கடித்துக் கொண்டான் நீலன்... தன் அவசரத்தனத்தை எண்ணி. அதே சமயம் அவன் மனைவி...
என்னங்க இது... உங்களுக்கு என்ன ஆச்சு? ஏன் இப்படிக் கத்தினீங்க? கூட்டத்திலே எல்லாரும் நம்மையே பாக்கறாங்க.
அதெல்லாம் கனவில் ரணமல்லன் என்பவர் கூறியதல்லவா. அவை இனிமேல் நடக்கப்போகிறவை தானே. அன்று மலை மீது நான் தூங்கிய போது ஏதோ ஒரு சக்தி பத்தாண்டுகளுக்குப் பிறகு என்ன நடக்கப் போகிறது என்பதை முன்கூட்டியே கனவாக எனக்குக் காட்டி இருக்கிறது.
அதை இப்படிப் பட்டவர்த்தனமாக நான் பறைசாற்றலாமா?
தொடரும்

## 22. திப்புவின் கோபம்

பெரிதாக அதிர்ந்து. அந்த அதிர்ச்சியில் நம்பிக்கை இம்மியும் கலவாது கூச்சலிட்ட தமது குமாரனின் வெறி கொண்ட தோரணையைக் கண்டு கொஞ்சமும் மாறுதலின்றி அமைதியாகக் கவனிக்கிறார் மகா சுல்தான் ஹைதர் அலி.

''நீங்கள் சொல்வதை உண்மை என்று நிரூபிக்கச் சாட்சி பூதமாக...'' – திப்புசுல்தான் ஏதோ ஒரு வேகச் சுழிப்பு முனையில் தன்னை ஐக்கியப்படுத்திக் கூறி முடிப்பதற்குள், அவனை அவ்வாறு கூறிமுடிக்க விடச் செய்வது சரியல்ல என்று உணர்ந்த ஹைதர் அலி, ''நானே நிற்கிறேன்!'' என்று இடகாத்திரமாகக் கூறிக் கண்களை உருட்டி, மார்பை நிமிர்த்திக் கீழுதட்டின் அடிப்பாகத்தைத் தமது இடக்கையின் ஆள்காட்டி விரலால் உரசிக் கொண்டே கவனிக்கிறார்...

திப்பு சுல்தானுக்கு மேற்கொண்டு அடித்துத் திருத்தி எழுதுவது போல என்ன பதில் சொல்வதென்றே புரியவில்லை. அதற்கு உரிய பதிலே இல்லை என்பது போல அவனுக்குத் தெரிகிறது.

சிறிதுநேரம் வரை ஆவேச உணர்வின் நிலையாகி, பிறகு அமைதி காக்கும் சிலையாகி, முடிவில் துன்பியலின் வலையாகித் துடித் தடங்கிய திப்புசுல்தான், அடுத்துக் கொஞ்சமும் தயங்காது. ''அப்பா! நான் உடனடியாக ஸ்ரீரங்கப் பட்டினத்துக்குப் புறப்பட்டாக வேண்டும்!'' என்று கூறியது, சம்பந்தமில்லாத – ஹைதர் அலியே எதிர்பாராத – ஒரு திசை திருப்பமே போல் இருந்தது. அவனது இந்த மாறுதலான பதிலைக் கேட்டு ஒரு கணம் அதிர்ந்து போனார் ஹைதர் அலி.

''ஸ்ரீரங்கப்பட்டினத்துக்கா? எதற்காக? ஏன்?''

சொற்கள் அழுத்தம் நிறைந்த கனத்துடன் வெளிவருகின்றன.

''நீங்கள் சொன்ன செய்தியை என்னால் நம்ப முடியவில்லை. இதுகுறித்து நான் ஆராய வேண்டும்.''

''எனது வார்த்தைக்கு நீ அளிக்கிற மரியாதை இதுதானா?''

''உங்கள் திவ்யமான வார்த்தைக்கு நான் என்றுமே மரியாதை தரக் கடமைப் படுகிறவன். இதுபோலவே, எனது புனிதமான



நட்புக்கும் தூயதான காதலுக்கும் அசைக்க முடியாத கௌரவத்தைச் செலுத்துகிறவன் நான்! ஆகவே, அந்த நட்பும் காதலும் எந்த விதமாக எனக்குத் துரோகம் செய்திருக்கின்றன; அதன் அடிப்படை என்ன என்பது குறித்து நான் பரிசீலிக்க வேண்டாமா?''

''அப்படிப் பரிசீலித்து நான் சொன்னது உண்மைதான் என்பது தெரிய வருமேயானால்?''

''நிச்சயமாக அவர்கள் இருவரையும் தோலுரித்துத் தொங்க விடுவேன்! பொய்யென்று தெரியுமானால்...''

திப்புவின் முகம் விகாரமாகிறது...

ஹைதரின் முகமோ வினாக் குறியாகிறது...

''தெரியுமானால்?...''

''என்னை நானே தோலுரித்துக் கொள்வேன்!''

''நான் சொல்வது பொய் என்று நினைக்கிறாய்... இல்லையா?''

''நீங்கள்தான் பார்க்கவில்லையே! கேள்விப்பட்டதுதானே!''

''சொன்னவர்கள் அற்ப சொற்பமானவர்களல்ல!...''

''யார் அவர்கள்?''

''உனக்கு அது இப்போதைக்கு அவசியமில்லை. சந்தர்ப்பம் வருகிறபோது நானே நிரூபிப்பேன்!''

''இனிமேல் ஒரு சந்தர்ப்பம் வரவேண்டுமா?''

''நான் எதிர்பார்க்கிறேன்.''

''அவ்வாறானால் நீங்கள் எதிர்பார்த்துக் கொண்டே இருங்கள். நான் அதற்குமுன் முடிவை அறிந்து கொள்கிறேன்.''

''இப்பு...''

''மன்னிக்கவும் அப்பாஜான்! நான் இப்போதே புறப்பட்டாக வேண்டும்.''

''இப்போதே புறப்பட்டாக வேண்டுமா? இருக்கிற யுத்த நிலையில் என்னை விட்டுச் செல்ல உனக்கு மனம் வருகிறதா? என்னை இழக்க நீ தீர்மானித்து விட்டாயா? சர் அயர்கூட் என்கிற பயங்கரப் பறங்கிய ராஜதந்திரி நம்மை வீழ்த்தக் கணத்துக்குக் கணம் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறான். பறங்கிப்பேட்டையில் உனது தம்பி அப்துல் கரீம் கர்னல் பிரெய்த் வெயிட் சூழ்ச்சியில் அகப்பட்டுக் கொண்டு திண்டாடுகிறானாம். இந்த நிலையில் நீ ஸ்ரீரங்கப்பட்டணம் நோக்கிச் செல்வது உசிதமானால் நான் தடுக்கவில்லை. ஒரு தந்தையின் வீர முழக்கத்தை விட ஒரு துரோகமான நட்பும் துச்சமான காதலும்தான் சிறந்ததானால், நான் உன்னைத் தடுக்க வில்லை. நீ இப்போதே புறப்படலாம்!''

—ஹைதர்அலி மேலும் பேச விரும்பாது, வெறுப்பார்ந்த நிலையில் திரும்பி நடந்து சாளரத்தண்டையில் சென்று, துக்கித்த கண்களை ஒருகணம் மூடி, பிறகு திறந்து எங்கோ செலுத்திச் சூன்யத்துள் ஐக்கியமானவர் போல் அமைதியாக நின்றுவிடுகிறார்.

ஓரிரு நிமிடங்கள் வரை நின்று யோசித்த திப்புகல்தான், என்ன நினைத்துக் கொண்டானோ, பேச வார்த்தைகள் கிடைக்காமலோ அல்லது பேசுவதால் பயனில்லை என்று புரிந்து கொண்டதாலோ தனது அறையை நோக்கி விறுவிறுவென்று நடந்தான்.

முள் தைத்து உறுத்துகிற நெஞ்சோடு திரும்பிப் பார்த்த ஹைதர் அலி, மகனுடைய தைத்துப்போன உள்ளுணர்வைப் புரிந்தவரே போன்று கலங்கி நிற்கிறார்.



கண்களில் இரு துளிநீர் அரும்பி வெடிக்கிறது...

நாட்டின் நலனுக்காகவும் எதிர்காலத் தென்னகத்துக்காகவும், தாம் செய்த இந்த ராஜதந்திரச் செயல், நன்மையாகவே முடிய வேண்டும் என்றும், இதனால் தமது அருமைந்தப் புதல்வனுக்கு எந்த விதத்தீங்கும் ஏற்பட்டு விடக்கூடாது என்றும் மனத்துள் பிரார்த்தித்துக் கொள்கிறார்.

தனது அறையில் தனிமையை நாடிச் சென்று ஆரோக்கியமற்ற சுவாசத்துடன் மஞ்சத்தில் அமர்ந்திருந்தான் இப்புகள் தான். மனம் பல வாறுக அலைந்து, முட்டி, மோதிப் போராடுகிறது...

'அவர்கள் இவ்வாறு, தனக்குத் துரோகம் செய்திருப்பார்களா?' — என்று கேட்கிறது வெளி மனம்.

'சீ! நிச்சயம் அவ்வாறு இருக்காது' என்றது உள்மனம்.

'ஏனிருக்காது?' என்றது துர்மனம்!

எப்படியெல்லாமோ சிந்தித்துப் பார்த்ததில் அவனுக்கு அவர்கள் மீது பரிபூரண நம்பிக்கையே விசுவரூபமாக எழுந்து தெரிகிறது...

சிந்திக்கிறான், சிந்திக்கிறான், சிந்திக்கிறான்.:



பொழுது விடிந்து கொண்டிருக்கிறது...

ஒரு முடிவுக்கு வந்த அவன், தந்தையின் கட்டளைக்கு மதிப்பு தந்து தஞ்சை நோக்கி யுத்தப் பயணம் செய்யத் தீர்மானித்தான்.

ஸ்ரீரங்கப் பட்டினத்திலிருந்து புறப்பட்ட நாளிலிருந்து யுத்தம், யுத்தம், யுத்தம்.

ஓ... என்ன யுத்தமோ? என்ன வெற்றியோ? என்ன மனிதர்களோ?

தஞ்சை முதலான இடங்களை வெற்றி கண்டு வீர கர்ஜனையாய் ஸ்ரீரங்கப்பட்டினம் நோக்கித் திரும்பிக் கொண்டிருந்த திப்பு சுல்தானுடைய நெஞ்சில் எத்தனை விதமான எண்ணங்கள், எத்தனை விதமான கோணங்களில் எழுந்து அலைமோதுகின்றன...

ஆ! ரங்கநாயகியும் பசவராஜும்...

இந்த மன உளைச்சலினூடே கும்பினிப் பட்டாளத்தை வென்று வீரமுழக்கமிட்டதை நினைக்குந்தோறும் அவனுக்கே ஓர் ஆச்சரியம்...

என்னதான் பிரெஞ்சு ராணுவ உதவியிருந்தாலும் படை நடத்துவதில் ஒரு ராஜதந்திரம் அவசியமாகிறதே! கும்பினியின் முரட்டு ராணுவத் தளபதிகளுள் ஒருவனான கர்னல் பிரெய்த் வெய்ட்டை வெல்லுவது ஓர் அசாத்தியமான காரியமாயிற்றே! ஆ! அந்தப் பிரெய்த் வெய்ட், திப்புவை எப்படியெல்லாம் அலைக்கழித்துப் போரில் ஆட்டிப் படைத்தான்! பிறகு தோற்றான்! ஓடிச் சென்று மறைந்தான்...

இப்போது நினைத்தாலும் நெஞ்சு வெடிக்கிற மாதிரி...

அவனை எப்படிப் பழிதீர்ப்பது என்பதில் திப்பு சுல்தான் மனம் பெரிதாகச் சிந்தித்தது.

சேனைகளுடன் ஸ்ரீரங்கப்பட்டினத்தை அடைகிறான்.

ஜயப் பதாகையுடன் திரும்புகிற திப்பு சுல்தானை, ஸ்ரீரங்கப்பட்டினமே திரண்டு வரவேற்று மகிழ்கிறது...

அதிர்வேட்டுக்கள்...

---

# ஓ! இறைவனே!

மதம் மாறினால் அதை
அரசியல் நிர்ணயச் சட்டம் ஏற்பதுபோல,
சாதி மாறினால், அதையும் ஏற்க
சட்டத்தைத் திருத்துங்கள்!

நான் ஒரு ஹரிஜன் ஆக,
மலைவாழ் பழங்குடிமகன் ஆக,
என்னைவிட மிகவும் பிற்பட்ட
ஏதாவது ஒரு ஜாதியில்
நான் 'கன்வர்ட்' ஆக,
கருணை காட்டுங்கள்! ஓ! இறைவனே!

நிலவைஜி.



---

திப்புவின் வயதை எண்ணுவது போலப் பீரங்கிகள் முப்பத்திரண்டு முறை முழங்குகின்றன.

லால்மகாலின் வெளிவாசலில் நின்று, அன்னை பெரிய சுல்தானா பேகம் பக்ருன்னிஸா அன்புடன் முக மலர்ந்து மகனை வரவேற்கிறாள்...

அன்னையின் கால்களில் பணிந்தெழுந்த திப்பு சுல்தான், எந்த எதிருணர்வான முக பாவங்களையும் எடுத்த எடுப்பில் காட்டிக் கொள்ளாமல், தன்னைச் சூழ்ந்து நின்ற அனைவரையும், உதட்டைக் கடித்து நெற்றி சுருங்கக் கண்களை மேலே உயர்த்தி மௌனமாக நோட்டம் விடுகிறான்...

அவனது அந்த அமைதியே — மௌனமே அனைவருக்கும் ஒருவித அதிர்ச்சி கலந்த பயத்தை உண்டுபண்ணுகின்றன...

இத்தனைக்கும் அவர்களுக்கு என்ன நடந்ததென்ற உண்மறைவு தெரியாதெனினும் 'பசவராஜ், ரங்கநாயகியை இழுத்துக் கொண்டு ஓடிவிட்டான்' என்று பரவிய செய்தி தெரிந்திருந்தது. அது எப்படி? எவ்வாறு? என்பன குறித்து அவர்களாகவே யூகித்துக் கொண்டவை ஆயிரம்!

அருகில் நின்றிருந்த தனது சுல்தானாக்களைக் கவனிக்கிறான் திப்புசுல்தான்.

ருக்கய்ய பானுவின் இடக்கையில் அழுகுரு வாய்க் குந்திக் கொண்டிருந்த குழந்தையின் மழலை முகம்...

ஆண் குழந்தை...

ஓ... இவன் குட்டிச் சுல்தானல்லவா!

ஸ்ரீரங்கப்பட்டினத்திலிருந்து புறப்படுகிற போது, திப்புசுல்தான் தனது பட்டத்தரசி ருக்கய்யபானுவிடம் பேசிய பேச்சுக்கள், நினைவை முற்றுகையிடுகின்றன...

தனது பிள்ளைகளிடம் இயற்கையாகவே பாசமுடைய திப்பு சுல்தான், ருக்கய்யபானுவிடம் ஒட்டிக் கொண்டிருந்த வாரிசுவை — குழந்தையை ஆவல் மீறிய வேகத்துடன் அருகே சென்று பற்றித் தூக்கியபோது...

ஒன்றரை வயதைத் தாண்டிய குட்டித் திப்புசுல்தான் வீறிட்டு அலறுகிறான்...

பாசம் என்பதும் பழக்கத்தால் தான் வருவதுபோலும் என்று உணர்ந்த திப்புசுல்தான், குழந்தையை ருக்கய்ய பானுவிடமே கொடுத்துவிட்டு அரண்மனையுள் பிரவேசிக்கிறான். தனது அறை நாடிச் சென்ற திப்பு சுல்தான் அன்றைக்கு முழுதுமே பலத்த யோசனையில் ஆழ்ந்து கிடந்தான்.

பொழுது பலபலவென்று விடிகிறது...

அதிகாலை நேரத்தில் பெரிய சுல்தானுவுக்கு வந்திருந்த கடிதம் அவனை வெகுவாகப் பிரமிக்கச் செய்திருந்தது. செய்தியில் பல விஷயங்கள் இருந்தன. ஆனால் பசவராஜ், ரங்கநாயகி என்ன ஆனார்கள்? உண்மையிலே அவர்கள் ஓடிவிட்டவர்கள்தாமா? என்பன போன்ற விஷயங்கள் செய்தியில் குறிப்பிடவில்லை. அவர்களைத் தீர்த்துக் கட்டிவிடுமாறுதான் முன்னம் கடிதம் அனுப்பியிருந்தான். ஆனால், பரவிய செய்தி மாறுபட்டிருந்தது. அது அவனைக் குழப்பிக் கொண்டிருந்தது. இதுபற்றியதில்தானே அறிய அவன் ஆவல் கொண்டிருந்தது...

உண்மையிலும் அந்தச் செய்தியில் அவர்களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கலாம். ஆனால் ஹைதருக்கு எழுதப் படிக்கத் தெரியாது; பிறரைக் கொண்டுதான் இதனை நிறைவேற்றிக் கொள்ள முடியும். ஆகவே இந்த ரகசியச் செய்தியை அவர் நெஞ்சோடு பூட்டி வைத்துக் கொண்டிருக்கலாம் என்பதை யோசித்துப் பார்க்க முடியாது போய்விட்டது பெரிய சுல்தானா பேகத்துக்கு!

மகாலின் பிரதான கூடத்தை நாடிச் செல்கிறபோது அங்கே திவான் பூரணய்யா, மகா சுல்தானா பேகம் பக்ருன்னிஸாவுக்காகக் காத்திருக்கிறார்.

திவான் பூரணய்யா மிகவும் மரியாதையுடன் எழுந்து வணக்கம் போடுகிறார்.

கம்பீரமாக நடந்து வந்து கொண்டிருந்த பெரிய சுல்தானா பேகம் பக்ருன்னிஸா, "அமருங்கள் திவான் ஐயா!" என்று கூறியவாறு தனது ஆசனத்தில் அமர்ந்தாள்.

"திவானய்யா! நியாயப்படி நான் எல்லோரையும் அழைத்து வைத்துக் கொண்டு ஆலோசிக்க வேண்டிய விஷயம் இது. ஆயினும் ஒரு முன்னாலோசனைக்காக உங்களை அழைத்தேன். திப்புவின் திடீர் வருகை ஏதோ ஒரு கலக்கத்துக்குரிய சூழலை உண்டுபண்ணியிருக்கிறது. இந்த நிலையில் நமது மகாசுல்தான் கடிதம் அனுப்பியிருக்கிறார். இன்று காலையில் தான் அது எனக்குக் கிடைத்தது" என்று கூறிய பெரிய மகாசுல்தானா பேகம் பக்ருன்னிஸா, சுற்றும் முற்றும் மிகவும் கவனத்துடன் கண்களை ஓட்டுகிறாள்...

"கடிதத்தில் பல விஷயங்களை எழுதியிருக்கிறார். அது இரகசியமானதும்கூட. ஏனோ காரணமில்லாமல் திவான்களையும் சில அதிகாரிகளையும் உடனடியாக அவரது பாசறைக்கு அனுப்பி வைக்கும்படி எழுதியிருக்கிறார். அதுதான் எனக்குப் புரிபடவில்லை."

சிறிதுநேரம் மௌனமாக யோசித்துப் பார்த்த திவான் பூரணய்யா, "பேகம் சாகிபா! மகாசுல்தானின் ஆணை அதுவானால், இதில் ஏதோ ஒரு மூலகாரணம் அடங்கி இருக்கும். மகா ராஜதந்திரியான அவரது இந்த முடிவை நீங்களும் நாங்களும் ஏற்றுத்தான் தீரவேண்டும்."

"காரணம் என்னவென்றுதான் புரியவில்லை" என்று கூறிய பெரிய சுல்தானாபேகம் பக்ருன்னிஸாவின் குரலைத் தொடர்ந்து —

"நான் சொல்லுகிறேன்!" என்ற திப்புவின் காம்பீரியக் குரல் எதிரொலிக்கிறது...

துயில் கலைந்து எழுந்து வந்த திப்பு சுல்தான், அதுவரையில் அங்கு நடந்த உரையாடல்களைச் செவிமடுத்து இடைபுகுந்தான்.

திவான் பூரணய்யா மிகவும் அதிர்ச்சியுடன் எழுந்து நின்று சலாமிட்டார்.

அருகே வந்த திப்புசுல்தான், அன்னையையும் அமைச்சரையும் உற்றுக் கவனிக்கிறான்...

அவன் அமரவில்லை. கண்கள் சிவந்து நெருப்புத் துண்டங்களைப் போலக் காணப்படுகின்றன. ஒரு கையை இடுப்பில் வைத்து, இன்னொரு கையைத் தொங்கவிட்டு; வலது காலை ஒருக்களித்து நின்று கவனித்த அவனது தோரணை, அச்சத்தைத் தரக்கூடியதாக இருந்தது.

அவன்: "ஒரே நிமிடத்தில் டில்லியிலிருந்து மெட்ராஸுக்கு போயிட்டுது..!"

இவன்: "அவ்வளவு வேகமாகப் போகக் கூடிய பிளேன்கூட இருக்கா என்ன?..."

அவன்: "பிளேன் இல்லே...! எங்க வீட்டு ரேடியோவின் மீட்டர் முள்!"

உ. ராஜாஜி.



"என்ன காரணம் மகனே?"

திப்புவின் உதடுகளில் அலட்சிய நெளியல்.

"இங்கே நான் எதற்காக வந்தேன்? ஏன் வந்தேன்? என்கிற காரணம் எனதருமை தந்தையார்க்கு நன்றாகவே தெரியும். ரங்கநாயகியை இழுத்துக் கொண்டு பசவராஜ் தான் ஓடினானா? அல்லது ஓட விட்டார்களா என்பது இன்னமும் சந்தேகத்துக்குரியதாகவே இருக்கிறது. இதனால் எத்தனை அசம்பாவிதங்கள் நிகழுமோ? அல்லது இதனில் சம்பந்தப்பட்ட எத்தனை அதிகாரிகள் தோலுரிக்கப்படுவரோ? என்கிற ஐயம் தந்தையார்க்கு ஏற்பட்டிருக்கிறது! எனவேதான் திவான்களையும் அதிகாரிகளையும் உடனடியாக அனுப்பி வைக்குமாறு கடிதம் எழுதியிருக்கிறார். அம்மாஜான்! அந்தக் கடிதத்தை நான் பார்க்கலாமா?"

"அது எனக்கே எழுதியது. அதனை நீ பார்க்க வேண்டும் என்று விரும்புவது தேவையற்றது."

"ஓகோ! உண்மைதான்! நான் ஏன் அதனைப் பார்க்க வேண்டும்? இது குறித்து என்னைக் கலந்தாலோசிக்கவேண்டிய அவசியம் என்ன இருக்கிறது? இன்றே எல்லோரையும் அனுப்பி வைக்கலாம்! அதற்கு முன்னால், இந்த நவாப் திப்புசுல்தான் ஓர் ஆணையிடுகிறான்!"

அவன் ஒருகணம் நிறுத்திக் கவனிக்கிறான்.

என்ன ஆணை பிறக்கப் போகிறதோ என்று மகாசுல்தானா பேகம் பக்ருன்னிஸாவே ஒரு கணம் அதிர்ந்து போனாள்.

திப்புசுல்தானின் குரல் ஓங்கி ஒலிக்கிறது.

"பசவராஜின் காதலி, அந்தப் பேரழகி மஞ்சுளா தேவியைச் சிறையெடுத்து வந்து எனது ஜனானாவில் அடைக்க வேண்டும். இதனைத் திவான் பூரணய்யாவின் பொறுப்பில் விடுகிறேன்!"

(தொடரும்)

# மாங்காடு
# ஸ்ரீ காமாக்ஷி மகிமை

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:!

## "மாங்காடு ஸ்ரீ காமாக்ஷி மகிமை

நூலில் லலிதோபாக்யானம், காமாக்ஷி விலாசம் முதலிய ப்ரமாண நூல்களை ஆதாரமாய்க் கொண்டு, பண்டாஸுரனின் ஆதிபத்தியம், அவனுடைய ஸம்ஹாரம், காமாக்ஷியாய் அவதரித்து தபஸ் செய்தது முதலிய சரித்திரங்களுடன்; ஸ்ரீ சக்ரப்ரதிஷ்டை ஆவரண தேவதைகளின் விபரம், விசேஷங்கள் விளக்கப்பட்டுள்ளன. இந்த சிறந்த நூலின் மூலம் மாங்காட்டு ஸ்ரீ காமாக்ஷியின் மஹிமையை உணர்ந்து வழிபட்டு இந்த தேவியின் அருளால் எல்லா மங்களங்களையும் அடைவார்களாக"

—ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

இது படிப்போர்க்கு எல்லா மங்களங்களையும் பெற்றுத்தரும் பக்தி நூல். இதில் மட்டுமே உள்ள "ஸ்ரீ ஆம்ராரண்ய காமாக்ஷி அஷ்டகம் மனனம் மூலம் பயன் பெற்றோர் கணக்கற்றவர்.

ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாள் ப்ரதிஷ்டை செய்த அர்த்தமேருவும் ஸ்ரீ காமாக்ஷியின் அருள் பாலிக்கும் பூஜைக்குரிய படமும் புத்தகத்தின் முகப்பாக அமைந்துள்ளன. அம்பாள் அருள் எல்லோருக்கும் கிடைக்கவேண்டி மலிவு விலையில் இதனை வெளியிட்டுள்ளோம்.

72 பக்கங்கள் விலை ரு. 2-00 தனிப் பிரதிக்கு ரு. 2-25 M. O. செய்க.

---

புத்தக வியாபாரிகளும் ஏஜண்டுகளும் 25% கழிவு நீக்கி தேவையான பிரதிகளுக்கு M. O. அல்லது டிராப்ட் அனுப்புக. கவர்ச்சிகரமான மூவர்ண போஸ்டர் உண்டு.

---

விவரங்களுக்கு: **அநுராகம்**
54, பாண்டி பஜார்
சென்னை-600 017

எஸ். லக்ஷ்மி சுப்பிரமணியம் அளிக்கும்

# மங்கையின் டைரி

பெண்களின் அந்தரங்கமான கேள்விகளுக்கு நுட்பமாக பதில் அளிக்கும் புத்தகம். மனோதத்துவ ரீதியிலும் மருத்துவ முறையிலும் வாழ்வில் சுகம்பெற ஒவ்வொரு பெண்ணும் கூடவே வைத்திருக்க வேண்டிய கைப்புத்தகம்.

தனிப்பிரதிக்கு விலை ரு 6/- மட்டும் M.O. செய்யவும்

## கலைஞன் பதிப்பகம்
தியாகராய நகர் : சென்னை-600017

# வசந்தங்கள் வருவதில்லை



டி. ரங்கநாயகி

“ஏன்டா 'ஷாலிமார்' படிச்சுட்டியா? நான் ரிடர்ன் பண்ணியாகணும்!'' நாகு கேட்டான்.

''ஸாரிடா... படிச்சுட்டேன்... எடுத்துண்டு வர மறந்துட்டேன்... நாளைக்கு ஷ்யூரா கொண்டு வந்துடறேன்.''

''நாளைக்கு எங்கேடா கொண்டு வரப் போறே? நாளைக்கு 'ரிபப்ளிக் டே' ஆச்சே! ஆபீஸ் லீவு... நீ பாட்டுக்கு ஞாபகம் இல்லாமே ஆபீஸ்லே போய் நிக்கப் போறே! நாளன்னிக்கு அவசியமா கொண்டு வந்துடு... நான் லைப்ரரிக்கு ரிடர்ன்பண்ணியாகணும்..'' நாகு அடுக்கிக் கொண்டே போனான்.

'நாளைக்கு ரிபப்ளிக் டே ஆச்சே' நாகுவின் இந்த வார்த்தைகளுக்கு மேல் என்னால் அவனைத் தொடர முடியவில்லை.

'நாளைக்கு ரிபப்ளிக் டே!' எண்ணத்தில் வார்த்தைகள் குதி போட்டன.

இன்று ஜனவரி இருபத்தைந்தாம் தேதி! சே... மறந்து விட்டேனே! இந்தத் தேதியின் முக்கியத்துவத்தை என்னால் எப்படிக் கவனிக்காமல் விட முடிந்தது?

தேதிதான் மறந்ததே தவிர என்னால் அவளை என் சிந்தையினின்று விலக்க முடிந்ததா என்ன?

நினைவுகள் படபடத்தன.

சங்கீதா எண்ணத்தில் வலம் வந்தாள். போன வருடம் இதே நாளில்தானே அவள் வசந்தமாய் என்னை நெருங்கி வந்து ஆட்கொண்டாள்!

வந்ததும் தெரியாமல் போனதும் மறையாமல் சூறாவளியாய் என் உள்ளத்தைத் தாக்கி மகிழ்ச்சி இலைகளை உதிர்த்து விட்டு விலகிப் போய் விட்டாளே!

என்னுள் சங்கீதா நடனமாடத் தொடங்கினாள்.

இதயத்தில் சங்கீதா படர்ந்தாள்.

அவளது நினைவுகளை விலக்கி விட்டு, ஆபீஸில் இன்று வேலை செய்வது என்பது என்னால் முடியாதகாரியம்! பிரம்மமாய்ச் சூனியத்தைப் பார்த்தபடி உட்கார்ந்திருக்க வேண்டியதுதான்!

நடக்கலானேன்.

கால்கள் 'பாலிமார்' ஹோட்டலை நோக்கி நடை போட்டன.

'பாலிமாரில்' போன வருடம் இதேநாளில் சங்கீதாவுடன் உட்கார்ந்து சம்பாஷித்தபடி பரஸ்பர லயிப்பில் ஆழ்ந்து போன அதே மேஜையில் அரைமணியாவது உட்கார்ந்து சங்கீதாவில் மூழ்கியாக வேண்டும்.

சங்கீத்! இன்று ஒரு நாளாவது எனது நினைவு உனக்கு வருமோ?

பழைய நினைவுகள் என்னை மெல்ல ஆக்ரமிக்கின்றன.

எதிர்வீட்டுக்கு யாரோ குடித்தனம் வரப் போகிறார்கள் என்று அம்மா சொன்னபோது சங்கீதா என்கிற இனிமை அந்தக் குடும்பத்

தில் இருக்கப் போகிறது என்று எனக்குத் தெரியுமா என்ன?

''அம்மா! நான் ஆபீஸ் போயிட்டு வர்றேன்'' என்று மறுநாள் ஓர் இன்னிசை முழக்கம் கேட்கவும், அரை 'ஷேவ்' செய்த முகத்துடன் வாசலுக்கு வந்து பார்த்த நான் ஸ்தம்பித்து விட்டேன்.

மாநிறம்தான்! அதனால் என்ன? அன்னம் எழில் முகம். பதமான கடையலில் செழுமைக்கு இலக்கணம் கொடுக்கும் அங்கங்கள். நல்ல உயரம். அதற்கு ஈடான நீண்ட தலை முடியின் நெளிந்த நடனம். தாயிடம் ஏதோ சொல்லிப் புன்னகை செய்தபோது கன்னங்களில் ஜனித்த குழியான வசீகரம்.

சங்கீதா நடந்தாள்.

நான் விழுந்து விட்டேன்.

மறுநாளிலிருந்து நேரத்தைச் சரியாக 'அட்ஜெஸ்ட்' செய்து கொண்டு கிளம்பலானேன்.

என்னென்ன வழிமுறைகளைக் கையாண்டேன் என்று எனக்கே தெரியாது.

மூன்றே மாதங்கள் தான்!

முதலில் பழக்கம்.

பழக்கம் நட்பாகியது.

போன வருடம்... இதே நாள்... ஜனவரி இருபத்தைந்தாம் தேதி...

''அம்மா போயிட்டு வரேன்!'' இசை முழக்கத்துடன் சங்கீதா புறப்பட்ட மூன்றாவது நிமிடம் நானும் கிளம்பினேன்.

என் உள்ளத்தின் அபிலாஷையை எப்படியும் சங்கீதாவிடம் வெளிப்படுத்தி விடுவது என்கிற உறுதியுடன் வந்திருந்தேன்.

நான் அருகில் சென்றதும் என்னை எதிர்பார்த்துக் காத்திருந்தது போல் மலர்ந்தாள்.

அந்த விகசிப்பில் ஏதோ ஒன்று அதிகப்படியாகப் பொதிந்து கிடப்பதாக எனக்குள் ஒரு மெல்லிய உணர்வு.

''சார்!... 'கலீல் ஜிப்ரான்' வொர்க்ஸுனு உங்களுக்கு ரொம்பப் பிடிக்கும்னு சொல்வேளே. அவரோட 'டியர்ஸ் அண்ட் லாஃப்டர்' (Tears and Laughter) போயம் கலெக்ஷன் லைப்ரரிலேந்து கொண்டு வந்திருக்கேன்...படிச்சுட்டுத்தரேளா?...'' என்றவள் தயங்கியபடி, ''அதிலே உங்களுக்குன்னு பதிமூணும் பக்கத்துலே ரெண்டு வரிகளைப் பென்சிலாலே கோடிட்டு வெச்சருக்கேன்...'' என்றாள். அதைச் சொல்லி முடிப்பதற்குள் வார்த்தைகள் தடுமாறின. முகம் சிவந்தது. படபடப்பில் அவளது நெற்றியில் வியர்வைக் கோடுகள்.

பளீரென்று ஏதோ ஒன்று என்னுள் புரிய ஆரம்பிக்கவும், புத்தகத்தை அவசரமாகப் பிரித்து 13ம் பக்கத்தைப் புரட்டினேன்.

'Come close to me, oh companion
of my full life
Come close to me and let not
winter's touch
Enter between us'

என்கிற கவிதை வரிகளைக் கோடிட்டு இருந்தாள்.

என்னுடைய மன நிலையில்தான் அவளும் வந்திருக்கிறாள். காதல் மலர்ந்தது.

அன்று இருவரும் லீவு போட்டோம்.

'பாலிமார்' ஹோட்டலில் முதலில் ஸ்வீட் சாப்பிட்டோம். பிறகு பாதாம் ஐஸ்கிரீம். பாதாம் ஐஸ்கிரீமில் சங்கீதாவுக்கு இருந்த லயிப்பைக் கண்டு அவளுக்காக இன்னொன்று ஆர்டர் செய்தேன்.

நேரம் போவது தெரியாத பேச்சு. பேச்சில் திருப்தியடையாத பார்வைகளின் சங்கமம். உள்ளங்களின் ஆலிங்கனத்தில் பிறந்த சுகமான மயக்கம்.

வெளியே வந்தபோது நல்ல மழை.

மழைக்காக ஒண்டியபடி ஓரமாக ஒதுங்கிக் கொண்டு நின்றிருந்தபோது உடல்களின் இலேசான உரசலில் பிறந்த வெம்மை மின் சாரமாய்ப் பாய்ந்து புதியதொரு சுகானுபவத்தைக் கொடுத்தது எழுத்தில் வடிக்க முடியாத ஒரு காவியமாகும்.

இம்மாதிரி எங்களிடையே படர்ந்த வசந்தமான உணர்வுகள் சில மாதங்கள்தான் நீடித்தன.

பருவம் மாறியது.

திடீரென்று சங்கீதாவின் மூத்த சகோதரி தனது இரண்டு குழந்தைகளையும், கணவனையும்அநாதரவாய்த்தவிக்கவிட்டு மாரடைப்பில் காலமானாள். அதிலும் இரண்டாவது குழந்தை பிறந்து ஆறே மாதங்கள் ஆகியிருந்தன.

தனது அக்காவின் ஆன்மா சாந்தியடைய வேண்டுமானால் அக்குழந்தைகளின் தாயார் ஸ்தானத்தைத் தான்தான் ஏற்றுக் கொண்டாக வேண்டும் என்றும் அதற்காகத் தன் அக்காவின் கணவரை மணந்து கொண்டு, தனது காதலைத் துறப்பதைத் தவிர வேறு வழியில்லை என்றும் சங்கீதா மன்றாடினாள்.

என்னால் மறுத்துப் பதில் ஏதும் சொல்ல முடியவில்லை.

மனைவி, தாய் ஆகிய இரண்டு ஸ்தானங்களையும் ஒரே நாளில் பெற்றாள்.

வீட்டை மாற்றினேன்.

மனத்தையும் மாற்ற முயன்றேன்.

முடியவில்லை!

எங்கள் இருவரைத் தவிர வேறு யாருக்கும் விஷயம் தெரியாத நிலையில், ஏமாற்றம் உள்ளத்தைக் கனமாய் அழுத்த, ஊமை ரணத்துடன், நடைப் பிணமாய் உலாவினேன்.

நானெல்லாம் என்னை முகாரி பாடவிட்டு இன்னொருவனுக்கு இன்னிசை பாடச் சங்கீதா ஓடிவிட்டாள்.

---

✩ ஆள்கிறவர்கள்
❁ நன்னடத்தையுள்ளவர்
✩ களாயிருக்கும் பட்சத்தில்
❁ அவர்கள் விடுக்கும்
✩ உத்தரவுகளுக்கு எல்லோரும்
❁ கீழ்ப்படிகிறார்கள்.
✩ — கன்பூஷியஸ்
❁ — சக்தி கமலா

அவளோடு எனது வாழ்க்கையின் தாத்பர்யமே போய் விட்டதாக என்னுள் பாதிப்பு.

''என் வாழ்க்கையின் ஜீவனே நீங்கள் தான்! எந்த நிலையிலும் உங்களை என்னால் மறப்பது என்பது முடியாத காரியம்!'' என்று ஆயிரமாயிரம் வார்த்தைகளை மொழியாலும் விழியாலும் பேசினாயே! சங்கீதா! என்னை மறந்து, தனியே தவிக்க விட்டு உன்னால் எப்படிப் போக முடிந்தது?

'சரக்...' உரசுவது போல் ஒரு டாக்ஸி நின்றது. ''யோவ் உனக்கு அறிவு இருக்கா? நடு ரோட்ல கனா கண்டுக்குனு போறயே! வூட்லே சொல்லிக்கினு வந்துட்டயா?'' – டிரைவர் கத்தினான்.

''ஸாரி..'' என்று சொல்லி ஓரமாக நடக்கலானேன். மணியைப் பார்த்தேன்... 10.40.

போன வருடம் இதே நேரத்தில் பரஸ்பர. லயிப்புடன் சங்கீதாவிடம் என்னவெல்லாம் பேசிக் கொண்டிருந்தேன்...!

எண்ணங்களின் பிடியால் சற்றுத்தள்ளாடும் கால்களுடன் 'பாலிமாரில்' நுழைந்து நானும் சங்கீதாவும் முதன் முதலில் எந்த மேஜையடியில் உட்கார்ந்து சாப்பிட்டோமோ அந்த இடத்தை நாடிப்போன போது –

ஒரு தம்பதி உட்கார்ந்திருந்தனர்.

'சே... இங்கேயும் ஏமாற்றமா?' என்று விரக்தியுடன் திரும்பிய போது –

அவர்கள்... சங்கீதாவும் அவள் கணவனும்...

அவன் ஏதோ சொல்லக் கன்னத்தில் வசீகரமாகக் குழிவிழச் சிரித்தபடி பாதாம் ஐஸ் கிரீமை சங்கீதா சுவைத்துக் கொண்டிருந்தாள்.

என்னை அவள் கவனிக்கவில்லை.

வேகமாகத் திரும்பி ஆக்ரோஷத்துடன் கண்ணாடிக் கதவைப் பிடித்திழுத்து வெளி வந்தேன். உள்ளத்தில் வேக்காடு.

ஜனவரி இருபத்தைந்தை நினைவில்வைத்துக் கொண்டுதான் அவளும் வந்திருக்கிறாளா? இல்லாவிடில் தற்செயலாகக் கணவன் அழைத்து வந்திருக்கிறானா?

புரிந்து கொள்ள முடியவில்லை.

மெதுவாக நடக்கலானேன்.

கன்னத்தில் வசீகரமாகக் குழிவிழச் சிரித்தபடி பாதாம் ஐஸ்கிரீமைச் சுவைக்கும் சங்கீதா என் அகக்கண்ணில் தோன்றி உள்ளத்தை வெம்மையாக்க நடக்கலானேன்.

சுற்றுப்புற ஜனத்திரள்என்னையே பார்த்துக் கேலி செய்வதாக ஒரு பாதிப்பு.

ஐஸ்கிரீமைச் சுவைக்கும் சங்கீதா –

உள்ளத்தின் தாங்கவொண்ணாத வெம்மை –

சுற்றுப்புற ஜனத்திரளின் கேலி –

எதையேனும் பழி வாங்க வேண்டும் எனும் ஆக்ரோஷம் அலை அலையாய் உள்ளத்தில் மோதி... மோதி... மோதி...

பிரீஃப் கேஸை ஒருபுறமாகப் போட்டுவிட்டு, பக்கத்தில் கிடந்த ஒரு பெரிய கல்லை எடுத்துக் கொண்டு திரும்பி வந்து பாலிமார் ஹோட்டல் கண்ணாடிக் கதவை நோக்கி முழு ஆக்ரோஷத்துடன் கல்லை வீசினேன். நாலு பேர் என்னை நோக்கி ஓடி வருவது தெரிந்தது.

மினி மர்மத் தொடர்கதை

# நரிக்கொம்பு 6

## கிருஷ்ணவேணி

ரமேஷின் மரணம் இலக்கிய வட்டாரத்திலும் பத்திரிகை உலகிலும் மிகுந்த பரபரப்பையும் அதிர்ச்சியையும் ஏற்படுத்தியது. அந்த அளவுக்கு அவன் எழுத்து மக்களின் நெஞ்சங்களில் இடம் பெற்றிருந்தது. நல்ல ரசிகன், கலைஞன். ரமேஷ் ஒரு நாடகத்தையோ சினிமாவையோ கச்சேரியையோ, நாட்டியத்தையோ விமரிசிப்பானானால் அதற்கு ஒரு தனியான 'வெயிட்' இருக்கும். தங்களை ரமேஷ் விமரிசிக்க வேண்டுமென்று தவிப்போடு காத்திருப்பார்கள் கலைஞர்கள். தங்கள் படம் ரமேஷினால் நல்லவிதமாக விமரிசிக்கப்படவேண்டுமே என்று பீதியோடு காணப்படுவார்கள் சினிமாப்படத் தயாரிப்பாளர்கள். அவன் சிறுகதைகள் நாவல்கள் எழுதியதுண்டு. ஆனாலும் அவனைப் பாப்புலராக்கியது ஆராய்ச்சிக் கட்டுரைகள்தான். சரித்திரம், பண்பாடு, கலாசாரம் இவற்றில் மிக்க ஈடுபாடு கொண்டவன் ரமேஷ். பண்டைய மக்களின் வாழ்க்கை முறைகளை — இன்று கிடைக்கும் மிகக்குறைவான ஆதாரங்களை வைத்துக் கொண்டு படிப்போரை அந்தக் காலத்துக்கு அழைத்துச் செல்லும் சக்தி வாய்ந்ததாக இருந்தது அவனுடைய எழுத்துத் திறன். பண்டைய மக்களின் பழக்க வழக்கங்களை, நம்பிக்கைகளை மிக நுணுக்கமாக ஆராய்ந்து பல அரிய விஷயங்களை வெளியிட்டிருக்கிறான். இத்தனை சின்ன வயதில் — இருபத்தெட்டே வயது — இவ்வளவு திறமையும் அதனால் தேடிய புகழும் அவனை ஒரு பெரிய ஆராய்ச்சிக் குழுவில் முக்கிய புள்ளியாக்கியது. நாகர்களையும் அவர்களின் நாகரிகங்களையும் ஆராய்ந்து பல அரிய தகவல்களைச் சேகரிக்கும் பணியில் ஈடுபட்டு, அஸ்ஸாம் மாநிலத்திலுள்ள அபாயகரமான பகுதிகளில் சுற்றுப்பயணம் மேற்கொண்டான் ரமேஷ்.

ஓராண்டுக்கும் மேலாகத் தங்களைவிட்டுப் பிரிந்து போயிருக்கும் ரமேஷின் வரவை நண்பன் ஹரியும் காதலி நந்தினியும் எதிர்பார்த்திருக்கும் போதுதான் இப்படியொரு செய்தி வந்து பெரும் அதிர்ச்சியைக் கொடுத்தது. ரமேஷ் பணியாற்றிய பத்திரிகை நிறுவனத்துக்கும் அவன் மறைவு பேரிழப்பாயிற்று. எல்லாருக்குமே ரமேஷின் மரணம் நம்ப முடியாத ஆனால் நம்பவேண்டிய செய்தியாக இருந்தது.

அந்த ஹோட்டல் அறையில், பத்திரிகை நிருபர்களும் புகைப்படக்காரர்களும் அநீதாவைச் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். அநீதா தன் சித்தப்பாவின் மார்பில் முகம் புதைத்துக் கேவிக் கொண்டிருந்தாள். விநாடிக்கொரு தடவை ஃப்ளாஷ் லைட் பல்புகள் பளிச்சிட்டுக் கருகிக் கொண்டிருந்தன. பத்திரிகையாளர் கூட்டத்தில் ஹரியும் இருந்தான், நந்தினியுமிருந்தாள். அவள் கண்கள் சிவந்திருந்தன.

நிருபர்களின் துணிச்சலான கேள்விக் கணைகள் அடுத்தடுத்து வந்துகொண்டிருந்தன. முக்கியமாக ரமேஷின் திடீர் நிர்யாணம் அவர்களுக்குப் பரபரப்பான தலைப்புக்கும் விறுவிறுப்பான விஷயத்துக்கும் வாய்ப்பளிக்குமென்று எதிர்பார்த்தார்கள். அதை மையமாக வைத்தே வினாக்களை வீசினார்கள். அநீதாவின் விம்மல்கள் வெடித்து அழுகையாகியது. அவள் சித்தப்பா கத்தினார்.

''போதும்... போதும்... நிறுத்துங்கள்... எல்லாரும் வெளியேறுங்கள்...''

சட்டென்று அங்கு அமைதி சூழ்ந்தது. அப்போது கணீரென்று நந்தினியின் குரல் ஒலித்தது. ''பத்திரிகையாளர்களையும் அவர்களின் சுதந்திரத்தையும் நீங்கள் மதிக்காமல் இப்படி அவமானப்படுத்துவதை நான் ஆட்சேபிக்கிறேன்'' என்றாள் நந்தினி.

அநீதாவின் பாதுகாப்பாளரான சித்தப்பாவின் சின்னக் கண்கள் பளபளத்தன. சில விநாடிகள் தன் கண்களை மூடியவாறு மௌனமாக இருந்தார் அவர். பிறகு நந்தினியைத் துளைப்பது போலப் பார்த்தார். அந்தப் பார்வையை, அதன் தீவிரத்தை அவள் மறக்கவே முடியாதபடி இருந்தது. பிறகு மிகவும் சாந்தமான, அமைதியான குரலில் ''என்னை மன்னிக்க வேண்டும். என் மகளுடைய வேதனை எப்படிப்பட்டது, அவள் உங்கள் கேள்விகளால் எப்படிப் பாதிக்கப் படுகிறாள் என்பது எனக்குத்தான் தெரியும்...'' என்ற அவர் குரல் உடைந்து காணப்பட்டது. அநீதாவை அணைத்தபடி உள்ளே போய்விட்டார். நிருபர்களும் ஒவ்வொருவராகக் கலையலானார்கள்.

நந்தினியின் பின்னாலிருந்த ஹரி அவள் கைகளைப் பற்றி மெதுவாக ''என்ன நந்தினி இது? இப்படி அசட்டுத்தனமாக...'' என்று ஏதோ கூற வந்தவனிடமிருந்து தன் கைகளை வெடுக்கென்று உதறி விடுவித்துக் கொண்டாள். அலட்சியமாக ஹரியைத் திரும்பி ஒரு பார்வை பார்த்து விட்டு ''கணவனை இழந்த அவள், துக்கத்தில் அப்படியே கரைந்து போய்விட்டாளாக்கும்? அந்தச் சோகச் சித்திரத்தைக் கண்டு நீங்களும் நெகிழ்ந்து விட்டீர்களோ?'' என்றாள் வெடிப்புடன்.

''அவள் பார்வையற்றவள்'' என்றான் ஹரி. அந்தச் செய்தி நந்தினியை ஒருவிநாடி தாக்கி நிலைகுலையச் செய்தாலும் அடுத்த விநாடியே அவள் முகத்தில், விலகிய வெறுப்பு வந்து மூடிக் கொண்டது. ''அவள் குருடியானால் என்ன, முடமானால் என்ன. ரமேஷ் அவளைக் காதலிக்கவில்லை'' என்றாள்.

''குருடியானாலும் அவள் குரூபியல்ல...'' —இது ஹரி. வியப்போடு இதழ் விரிய அவனைப் பார்த்த நந்தினி ''அவள் அழகு உங்களை மயக்கி இருக்கலாம். ஆனால் ரமேஷ் மயங்கி இருக்க மாட்டார் — அப்படி 'மயங்கக் கூடியவருமல்ல அவர்'' என்றாள்.

''மயங்காதவனாக இருக்கலாம். ஆனால் மணந்து கொண்டிருப்பது அவளைத்தான்...''

நந்தினி பேசவில்லை. உறுதி குலைந்து குழந்தையானள் அந்தப் பூங்கொடி. அவள் கண்களில் நீர் திரண்டது. உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டவளாகத் தன் புறங்கையினல் வழிந்து ஓடத்தயாராக இருந்த கண்ணீரைத் தேய்த்துத் துடைத்துக் கொண்டாள். அவள் நெஞ்சு விம்மித் தணிந்தது.

தான் அவளிடம் கடுமையாக நடந்துகொண்டதற்கு ஹரி வருந்துபவன் போல அவள் தோள்களைப் பற்றி அணைத்தபடியே ''நந்தினி இவர்களிடமிருந்து நீ ஒதுங்கி இருப்பது தானே. இங்கு வந்து உன் உணர்ச்சிகளைக் குமுற விடுவானேன்?'' என்ருன்.

ஹரியின் பிடியிலிருந்து தன்னை உதறி விடுவித்துக் கொண்ட நந்தினி, ''நான் ஒதுங்கிப் போக வேண்டும். நீங்கள் மட்டும் அவளுடன் ஒட்டிக் கொள்ள வேண்டுமாக்கும். அவள் வனப்பு உங்களைப் பைத்தியமாக்கி இருக்கலாம். அல்லது அவள் செல்வம் உங்கள் கண்களை மறைத்திருக்கலாம். ஆனுல் எனக்கு எதுவுமே துச்சம். புரிந்ததா?'' என்ருள் ஆக்ரோஷமாக.

அவள் பேச்சும் பார்வையும் குற்றச்சாட்டும் ஹரியிடம் ஆத்திரத்தை விசிறிவிட்டது. அவள் தோள்களைப் பற்றிக் குலுக்கியவன் ''ஆத்திரத்தில் அறிவிழந்து போய்ப் பிதற்ருதே நந்தினி...'' என்ருன்.

''மூளை பிசகிப் போனது எனக்கல்ல...'' என்ருள் ஏளனமான நகைப்புடன் நந்தினி. ''அவள் சித்தப்பாவைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாதென்ற எண்ணமா உங்களுக்கு? நாலு ஐந்து கோடிகளுக்கு உரிமையாளராக்கும் அந்தக் குள்ள மனிதர். பல பெரிய தர்ம ஸ்தாபனங்களின் வருவாயை நிர்வகிக்கும் பெரும் புள்ளி. பெரும் தொழில் துறைகளிலெல்லாம் முதலீடு செய்திருப்பவர். இதெல்லாம் உங்களுக்குத் தெரியாதா என்ன? அவருடைய அத்தனை செல்வத்துக்கும் ஒரே வாரிசு இவள்தானும். அதுவாவது தெரியுமா?''

''தெரியாது... நீ யாரைப் பற்றி இப்படியெல்லாம் குறிப்பிடுகிருய்?''

''மிஸ்டர் மதன் அவர்களைப் பற்றித்தான். எவளுடைய எழிலில் நீங்கள் கிறங்கிப் போயிருக்கிறீர்களோ அவளுடைய சித்தப்பாவைப் பற்றி...''

மதன்... மதன்...

அந்தப் பெயர் ஹரியின் நினைவில் ரீங்காரமிட்டது. 'எங்கோ, எப்போதோ இந்தப் பெயரைக் கேட்டோமே... அதுவும் சமீபத்தில்...' நினைவைக் கசக்கிக் கொண்டான் ஹரி. சட்டென்று மின் அதிர்வு கண்டவனைப் போலச் சிலிர்த்துக் கொண்டான் ஹரி.

அன்றிரவு டெலிபோன் ஆபரேட்டர் கூறிய வார்த்தைகள் கணீரென்று ஒலித்தன—

'உங்களுக்கு வந்த 'காலை' டிரேஸ் செய்து கண்டு பிடித்துவிட்டேன். ஹோட்டல் அமர்பாலி, ரூம் நம்பர் 89-லிருந்து. ஆனுல் அந்த அறையை எடுத்திருப்பவர் ரமேஷ் அல்ல — மதன் ... மதன் ... ஆனுல் அவர் தமக்கு ரமேஷ் என்று யாரையும் தெரியாதென்கிருர்.

ஹரியின் மூளையில் பெரிய 'பஸ்ஸர்' இடைவிடாமல் ஒலிப்பது போலிருந்தது.

'இந்த மனிதர்தானு அந்த மதன்? அப்படியானுல்...? தனக்கு ரமேஷ் யார் என்றே தெரியாதென்பானேன்?'

அன்றிரவு டெலிபோனில் கேட்ட ரமேஷின் குரல் தெளிவாக ஹரியின் காதுகளில் ஒலித்தது.

—''ஜாக்கிரதையாக அதைக் காப்பாற்று ஹரி... அவர்களிடம் சிக்கிவிடாமல் பாதுகாக்க வேண்டும் அதை...''—பீதி நிறைந்த ரமேஷின் இந்தக் குரல் – எதையோ எச்சரிக்கை செய்யும் தவிப்பு நிறைந்த குரல்!

ரமேஷுக்குத் தன் குருட்டுப் பெண்ணை மனைவியாக்கி வைத்து விட்டு – ரமேஷை யார் என்றே தெரியாதென்று கூறும் மதன்...—

'இதில் ஏதோ மர்மமிருக்கிறது ஆத்திரமோ அவசரமோ படாமல் இதைக் கண்டாக வேண்டும். மதன் ஏதோ திட்டமுடன்தான் தம் மகள் அநீதாவுடன் இங்கு வந்திருக்கிருர். அவர் போக்கிலேயே போகவிட்டு அந்தத் திட்டத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். நந்தினியைப் போல உணர்ச்சிவசப்படக்கூடாது' என்ற முடிவுக்கு வந்தான் ஹரி.

(தொடரும்)



# பதம்

**மன்னார்குடி விசுவநாதன்**



ஜீப் வந்து நின்றது.

பல்வேறு மனக் கவலைகளினால் அலைக் கழிக்கப் பெற்றுச் சோர்ந்த உள்ளத்துடன், நாற்காலியில் இரண்டு கால்களையும் தூக்கிப் போட்டுச் சரிந்தவாறு அரைத் தியான நிலையில் இருந்த ஆசிரியர் சங்கரன் —

பிள்ளைகள் ஏக காலத்தில், ''சார்...! சார்...!'' என்று கூக்குரல் எழுப்பியவுடன், துணுக்குற்று எழுந்து உட்கார்ந்தார்.

தலைமை ஆசிரியர் தினகரனும், கூடவே இரண்டு அதிகாரிகளும் அவர் வகுப்பறை வாசலில் வந்து நின்றார்கள்.

அந்த அதிகாரிகளின் திகைப்பு ஒரு பக்கம் இருக்கட்டும். தலைமை ஆசிரியர் தினகர னுக்கே பெரிய திகைப்பாகப் போய்விட்டது. சங்கரன் இருந்த நிலையைப் பார்த்ததும்! கடமையைச் செய்வதில் எப்பொழுதுமே கண்ணும் கருத்துமாக இருக்கக் கூடியவர் சங்கரன்.

வயதிலும் அனுபவத்திலும் மூத்தவர்.

மாவட்ட கல்வி அதிகாரி மாணிக்கத்துக்குக் கோபம்: ''என்ன மிஸ்டர் தினகரன்...! ஆரம்ப வகுப்பு மாணவர்கள் சரிவரக் கண் காணிக்கப்பட்டுப் போதிக்கப்படுவது மிகவும் முக்கியம். கல்லூரி வாழ்க்கையில் ஒரு மாண வனுக்கு ஒரு மாதம்கூடப் பாடம் நடத் தாமல் இருந்தாலும், அதனால் அவன் பெரி தாகப் பாதிக்கப்பட்டுவிட மாட்டான். ஆனால் துவக்கக் கல்வி பயிலும் மாணவர்நிலை அப்படி அல்லவே...!''

''சார்...! வந்து...சங்கரன் கடமை தவறக் கூடியவர் இல்லை...'' என்று மெல்ல இழுத் தார் தலைமை ஆசிரியர் தினகரன்.

''நோ... நோ... செடியை நட்டவுடன் இடையில் நிறுத்தாமல் தினசரி தண்ணீர் ஊற்றினால்தானே செடியின் வளர்ச்சி ஒழுங் காக இருக்கும்? குறிப்பிட்ட அளவு வளர்ந்த வுடன் சில நாட்கள் தண்ணீர் ஊற்றாமலே கூட இருக்கலாம்... புரிகிறதா, இல்லையா?''

'புரிகிறது' என்கிற பாணியில் தலையை ஆட்டி விட்டுப் பவ்யமாகத் தம் கைகளைக் கட்டிக் கொண்டு நிற்கத் தொடங்கினார் தின கரன். அதற்கு மேல் பேசி, அனாவசியமாகப் பெரிய இடத்துப் பொல்லாப்புக்கு ஆளாக அவருக்கு விருப்பமோ துணிச்சலோ இல்லை.

சங்கரனை ஒரு மாதிரியாகப் பார்த்துக் கொண்டே மாணவர்களின் பக்கம் திரும் பினார் மாணிக்கம். பக்கத்தில் இள நிலைக்கல்வி அதிகாரி குமாரனும் இருந்தார்.

''தம்பி...! நீ சொல்லு. சிவாஜியின் தாயார் பெயர் என்ன?''

''ராஜாமணி அம்மாள் சார்...''

'குப்'பென்று வியர்த்து விட்டது சங்கர னுக்கு.

அப்பொழுதுதான் அந்த வாண்டுகள் சினிமா சம்பந்தமான பேச்சுக்களில் ஈடுபட் டிருந்திருக்க வேண்டும். அதன் நினைவு மாறு முன்னரே திடீரென்று வந்து இப்படியொரு கேள்வியைக் கேட்டவுடன், அப்படிப் பதில் சொல்லிவிட்டான் அந்த மாணவன்.

''இதுதான் நீர் பாடம் நடத்துகிற லட்ச ணமா? எதிர்கால இந்தியாவை உருவாக்கும் சிற்பிகளா நீங்கள்? உருப்பட்டாற் போலத் தான்...'' என்று சங்கரனைப் பார்த்துச் சீறி னார் மாவட்ட கல்வி அதிகாரி மாணிக்கம்.

''இல்லே சார்... வந்து... நீங்க எந்தக் கேள்வி வேணும்னாலும் கேளுங்க... பசங்க பதில் சொல்லுவாங்க...'' என்று குழைந்தார் சங்கரன்.

''அதுதான் கேட்டேனே... ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்... ப்பூ... ஷேம் ஷேம்...'' என்று சொல்லிவிட்டு அப்பால் நகர்ந்தார் அதிகாரி.

காலையில் வீட்டிலிருந்து கிளம்பும்போது என்றுமில்லாத வகையில், பெரிய பெண் சாந்தியைக் கைநீட்டி அடித்து விட்டார் சங்கரன்.

காந்தியடிகளின் படத்தையும் வள்ளல் பெருமானின் அருட்பாவையும் தியானம் செய்யும் அவரால், எப்படித்தான் சாந் தியைக் கைநீட்டி அடிக்கும் வரையில் கோபத்தைக் கட்டுப்படுத்தாமல் இருக்க முடிந்ததோ?

அவராலேயே நம்ப முடியவில்லை.

ரவியும் சேகரும் பள்ளிக்கூடம் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

சாந்தி அன்று பள்ளிக்கூடம் போகாமல் அடம் பிடித்துக் கொண்டிருந்தாள். அவள் பத்தாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந் தாள். 'வயதுக்கு வந்து விட்டாள்.'

'எம்பிராய்டரி' வேலைக்குப் பயன்படும் வெள்ளைத் துணி வாங்கிக் கொண்டுதான் பள்ளிக்கூடம் போகவேண்டுமென்று தாயாரிடம் வாக்குவாதம் பண்ணிக்கொண்டிருந்தாள். பையன்கள் தங்களின் சிலேட்டுகள் உடைந்துவிட்டன வென்றும் புதிதாக சிலேட்டுகள் வேண்டுமென்றும் கேட்டு அழுது கொண்டிருந்தார்கள். சங்கரனிடம் சல்லிக் காசு இல்லை. மாதக் கடைசி.

''சாந்தி... நீ அடம் பிடிக்க ஆரம்பித்ததைப் பார்த்து விட்டுத்தானே இந்தப் பசங்களும் சிலேட்டு வேண்டுமென்று கேட்கிறார்கள். காசு இருந்தால் வாங்கித் தர மாட்டேனா? ஏம்மா என்னை இப்படிச் சோதிக்கிறே?'' என்று நொந்து கொண்டார் சங்கரன்.

அவர் தர்மபத்தினி லட்சுமி சும்மா இருந்திருக்கலாம். ''புள்ளைங்கன்னு சொன்னா... எல்லாம்தான் கேட்கும். கூடாத காலத்திலே கொழந்தைகளைப் பெத்துப் போட்டுட்டு ரொம்ப அலுத்துக்குறீங்களே...'' என்று விளாசத் தொடங்கினாள்.

''அதுதானே நானும் கேட்கிறேன்... கேட்கிறதை வாங்கிக் கொடுக்க முடியலேன்னு சொன்னா... எதுக்காகப் படிக்க வைக்கணுமாம்?'' என்று சாந்தி கேட்டவுடன், ஆத்திரமும் அவமானமும் ஒருங்கே உந்தித் தள்ள, என்ன செய்கிறோம் என்றே புரியாமல், சாந்தியின் கன்னத்தில் ஓர் அறை வைத்துவிட்டுத் தெருவில் இறங்கி நடக்கத் தொடங்கி விட்டார் சங்கரன்.

தான் செய்தது எந்த வகையிலும் சரி இல்லை என்பதை உணர்ந்து கொண்ட அவரால், தெருவில், தொடர்ந்து நடக்கவே முடியவில்லை. எவ்வளவோ முயன்றும், வகுப்பறையில் வழக்கம்போல் உற்சாகமாகப் பாடங்கள் நடத்த முடியவே இல்லை.

மாவட்ட கல்வி அதிகாரியும் இளநிலைக் கல்வி அதிகாரியும் திடீர்விஜயம் செய்வார்கள் என்று அவர் எதிர்பார்க்கவில்லை.

**த**ம் அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டே இருந்தார் மாணிக்கம்.

''சே... வாட் எ ஷேம்? மிஸ்டர் குமரன்... ஐ கான்ட் ஸாடிஸ்ஃபை மை ஸெல்ஃப்... ப்ளீஸ் கிவ் ஹிம் சஸ்பென்ஷன் ஆர்டர் இம்மீடியட்லி... தென் வி வில் ஸீ...''

குமரனால் எதுவும் எதிர்த்துப் பேச முடியவில்லை. அவர் இன்ஸ்பெக்ஷனுக்குச் சென்ற போதெல்லாம், அந்தப் பள்ளியில் சங்கரனின் வகுப்பு மாணவர்கள்தான் கேள்விகளுக்குச் சிறப்பாகப் பதில் சொல்லுவார்கள். என்ன அநியாயம்... அன்றைக்கு என்று பார்த்து, இவர் ஒரு கேள்வியை யாரோ ஓர் அசட்டு மாணவனிடம் போய்க் கேட்க, அவன் வேண்டுமென்றோ அல்லது வேண்டாமென்றோ ஓர் அசட்டுத்தனமான பதிலைச் சொல்ல, நிலைமை இந்த அளவுக்கு விபரீதமாகப் போய் விட்டது...






மேலும் குறுக்காக இரு பெரும் முக்கோணங்களாகப் பிரியுங்கள். இரு முக்கோணத்திலும் பக்கங்களின் மீதுள்ள சிறு முக்கோணங்களின் கூட்டுத்தொகை 66. மொத்தமுள்ள 8 துணை முக்கோணங்களின் கூட்டுத் தொகை தனித்தனியே அதே 66 இந்த 'டயமண்ட்' நான்கு துணை டய மண்ட்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. ஒவ்வொரு துணை டயமண்டிலும் நான்கு சிறு டயமண்டுகள் உள்ளன. அவற்றில் எதிர் எதிரே உள்ள சிறு டயமண்டுகளின் கூட்டுத் தொகையும் 66தான். டயமண்டின் நான்கு முனை களில் எதிர் எதிரே உள்ள சிறு டய மண்டுகளின் கூட்டுத் தொகையும் 66. டயமண்டின் மையத்திலுள்ள நான்கு சிறு டயமண்டுகளில் எதிர் எதிரே உள்ள சிறு டயமண்டுகளின் கூட்டுத் தொகையும் 66தான். இன்னும் பல வழிகளிலும் கூட்டுத் தொகை 66 தான் வரும்.

நங்கைநல்லூர், இ. சங்கர்.

**வா**சலில் ஜீப் வந்து நிற்கும் ஓசை கேட்ட வுடனேயே, அடுக்களையிலிருந்த பங்கஜம் பயத்துடன் வெளியே எட்டிப் பார்த்தாள்.

மணி ஒன்று ஆகிவிட்டது.

காலையிலிருந்து சரியான தலைவலி அவ ளுக்கு. வேலைக்காரியும் இன்றைக்குப் பார்த்து 'மட்டம்' போட்டு விட்டாள். சற்று நேரத் துக்கு முன்புதான், படுக்கையிலிருந்து எழுந்து அடுப்பைப் பற்ற வைத்து ஏக காலத்தில் சோற்றையும் குழம்பையும் தயாரிக்கும் பணி யில் ஈடுபட்டாள்.

மாணிக்கத்துக்கு எப்பொழுதும், வெளியே போய்விட்டு உள்ளே நுழைந்தவுடன் சாப் பிட்டுவிட வேண்டும். இல்லாவிட்டால், கோபம் பொத்துக் கொண்டு வந்துவிடும்.

உடைகளைக் களைந்து, கைலியைக் கட்டிக் கொண்டு அங்கே வந்த மாணிக்கம், ''என்ன... சாதம் ரெடியாகி விட்டதா? ஏன்... லேட்?'' என்றவாறே, பானையின் விளிம்பில் ஒட்டிக் கொண்டிருந்த ஒரு சோற்றுப் பருக்கையைக் கையில் எடுத்து நசுக்கிப் பார்த்தார்.: ''ம்... இன்னும் வேகவில்லையே! சுத்த மோசம் நீ...'' என்று சொல்லிக் கொண்டே திரும்பி நடந்தார்.

அவரைப் பின்தொடர்ந்தாள் பங்கஜம்.

''இதோ பாருங்க.... சாதத்தை அளைந்து அதிலிருந்து மொண்டு கரண்டியில் வைத்துக் கொண்டிருக்கிறேனே.... இதிலேருந்து ஒரு பருக்கையை எடுத்துப் பாருங்க'' என்றாள்.

கரண்டியிலிருந்து ஒரு பருக்கையை எடுத்து நசுக்கிப் பார்த்தார் மாணிக்கம். ''ஆமாம். வெந்துதான் போய் விட்டது. பின் ஏன் அந்தப் பருக்கை மட்டும் அப்படி? ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்று சொல்லி யிருக்கிறார்களே...''

அவர் மனத்தின் உள்ளே மறைந்து நின்ற குழப்பம் மெல்ல விசுவரூபம் எடுத்தது: அலைக்கழிக்கத் தொடங்கியது.

''பழமொழி யெல்லாம் சரிதான். அதுக் காக அவசரத்திலே பானை ஓரத்திலே ஒட்டி யிருக்கிற ஒரு சோற்றை எடுத்துப் பார்த்து விட்டு, பானையின் உள்ளே இருக்கிற சோறு முழுதும் வேகவில்லை என்று நீர் மானிப்பது எந்த வகையில் விவேகமானது? சொல்லுங்கள் பார்ப்போம்....''

—இந்தக் கேள்வியை அவர் மனைவி பங் கஜம் கேட்டதாக அவருக்குத் தோன்றவில்லை. கண்களில் கண்ணீர் மல்கத் தம் எதிரே நின்று கொண்டு ஆசிரியர் சங்கரன் கேட்பது போல் தோன்றியது.

தாம் பெரிய தவறு செய்து விட்டதாக அவருக்குத் தோன்றியது. பாதாதி கேசம் இலேசாக நடுங்கத் தொடங்கி விட்டது. தம் கணவருக்குப் பசி வந்து விட்டால் ஒன்றுமே புரியாது என்று எண்ணிக் கொண்ட பங்கஜம், அடுக்களைக்குச் சென்று சமையல் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினாள்.

தம் அறையிலிருந்தவாறு டெலிபோனைச் சுழற்றிக் குமரனுடனும், தலைமை ஆசிரியர் தினகரனுடனும் பேச முயற்சி செய்தார். மாணிக்கம். ம்ஹூம்.... லைன் அவுட் ஆஃப் ஆர்டர்.

'ம்.... எப்படியாவது சஸ்பென்ஷன் ஆர் டர் சங்கரனின் கைக்குப் போகாமல் செய்ய வேண்டுமே' என்ற தவிப்புடன் காணப்பட் டார் அவர்.

பசி வயிற்றைக் கிள்ளியது.

''என்னங்க .... சாப்பாடு தயார் ... வாங்க....'' என்று அழைத்தவாறே அங்கு வந்தாள் பங்கஜம்.

'ஆமாம்.... சாப்பிட்டு விட்டுப் புறப் படுவோம். வாசலில்தான் ஜீப் நிற்கிறதே...' என்று நினைத்துக் கொண்டே டைனிங் ஹாலுக்குள் நுழைந்தார் அவர்.

**ஜீ**ப்பில் புறப்பட்டவர் ஒரு மணி நேரத் துக்கெல்லாம் அதே பள்ளிக்கூடத்தின் பக்கம் போய் இறங்கி விட்டார்.

தலைமை ஆசிரியருக்குத் திகைப்பு.

'என்ன இது! மத்தியானமும் வந்துவிட் டாரே.... இப்பொழுது யாருடைய சீட் டைக் கிழிக்கச் சொல்லி உத்தரவு பிறப் பிக்கப் போகிறாரோ' என்ற பயம் அவருக்கு.

''மிஸ்டர் தினகரன்...! சங்கரனின் வகுப் புக்குப் போகலாமா?''

''ஸார்.... அவருக்குத்தான் சஸ்பென்ஷன் ஆர்டர் கொடுத்தாகி விட்டதே'' என்று தினகரன் தயங்கியபடியே சொன்னார்.

''மிஸ்டர் தினகரன்...! ஐ ஆம் ஸாரி... நான் கொஞ்சம் அவசரப்பட்டு விட்டேன். ஐ வான்ட் டு வித்ட்ரா தி சஸ்பென்ஷன் ஆர்டர்....'' என்று சொல்லிக் கொண்டே வெளியே போய் ஜீப்பில் ஏறினார் மாவட்ட கல்வி அதிகாரி மாணிக்கம்.

அவர் உத்தரவுப்படி சங்கரனின் சஸ்பென்ஷன் ஆர்டரைக் கான்ஸல் செய்து, உடனே வந்து வேலையை ஒப்புக் கொள்ளுமாறு ஆர்டர் எழுதி, அதில் மாணிக்கத்தின் கையெழுத்தையும் பெற்றுக் கொண்ட பின் தாமும் ஜீப்பில் ஏறிப் புறப்பட்டார் தினகரன்.

சங்கரனின் வீடு.

சிறு பிள்ளைகள் இருவரும் சற்றுத் தொலைவில் மாடு ஒன்றைப் பிடித்துக் கொட்டிலில் கட்டும் பணியில் ஈடுபட்டிருந்தனர். உள்ளே கட்டப்பட்டிருந்த கன்றின் 'அம்மா.....' என்ற தீனமான ஒலி, மாணிக்கத்தின் உடம்பினுள் இனம் புரியாத சிலிர்ப்பைத் தூண்டி எழுப்பியது.

''சங்கரன் இருக்கிறாரா?'' என்ற தலைமை ஆசிரியரின் குரலைக் கேட்ட அவர் மனைவி லட்சுமி ஓடி வந்து கதவு மறைவில் நின்றவாறே, ''அதோ முன் பக்கத்து அறையில் இருக்கிறார். பள்ளிக்கூடத்திலிருந்து பியூன் என்னமோ கடுதாசி கொண்டு வந்து கொடுத்துக் கையெழுத்து வாங்கிக்கிட்டுப் போனான். அப்போ பிடிச்ச.... உள்ளாற நாற்காலியிலே போய் உட்கார்ந்து என்னமோ படிச்சுக்கிட்டே இருக்காரு...'' என்றாள்.

மாணிக்கமும் தினகரனும் உள்ளே நுழைந்தார்கள்.

நாற்காலியின் முன்னால் மேசையின் மேல் தம் இரண்டு கரங்களையும் கவிழ்த்து அதன் நடுவே முகத்தைப் புதைத்தவாறு தூங்கிக் கொண்டிருந்தார் சங்கரன்.

''சங்கரன்...., மிஸ்டர் சங்கரன்.... சங்கரன்....''

ம்ஹூம்....

தட்டிப் பார்த்து அலுத்துப் போன தினகரன், தலையைப் பிடித்துத் தூக்கினார். தலை ஏற்கெனவே தொங்கிப் போய்விட்டிருந்தது.

மேசைக்கு மேலே சுவரில் தென்பட்ட திருக்குறள் மாவட்டக் கல்வி அதிகாரி மாணிக்கத்தின் கண்களில் ரத்தக் கண்ணீர் வடியச் செய்தது அந்தக் குறள்:

'' மயிர்நீப்பின் உயிர்வாழாக் கவரிமா(ன்)
அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின் ''

# மூங்கில் படவிமரிசனம்

கூரை போடவும் மற்றும் பல காரியங்களுக்கும் கடையில் போய் மூங்கில் வாங்கி வருகிறோம். ஆனால் அந்த மூங்கில் எப்படிக் கடைக்கு வருகிறது என்பதை - மூங்கில் காடுகளில் அதை எப்படி வெட்டிச் சேகரித்து உப்பங்கழிகள் மூலம் கொண்டு வருகிறார்கள் என்பதை - அற்புதமான முறையில் விளக்குகிறது சட்டா.

கேரள மண்ணின் மணத்தை, கிராமத்துச் சூழ்நிலையை அப்படியே கொண்டு வந்துவிடுகிறார்கள். படம் வண்ணத்தில் இருப்பதால் இன்னும் அழகுடன் மிளிருகிறது. உப்பங்கழிகள், நதியோரங்கள், நீர்வீழ்ச்சி, காடு, எல்லாமே எழிலோடு காட்சி தருகின்றன. கதையும், காதலும் ஊடே இழையோடுகின்றன.

கமலஹாஸன், ஷீலா, சீமா, ஸோமன், மது எல்லாருமே இயற்கையாக நடித்திருக்கின்றனர். சண்டைக் காட்சிகளில் பொருத்தமின்றி குங்ஃபூவோ கராத்தேயோ சேர்க்கப்படவில்லை. உயிர் ஆசையால் உந்தப்பட்டவர்கள் எப்படிப் போராடுவார்களோ அப்படி யதார்த்தமாக இருக்கிறது.

கணவனால் கைவிடப்பட்ட அன்னு (ஷீலா), ராமு (கமலஹாஸன்) என்ற இளைஞனிடம் பருவ தாகத்தினால் ஆசை கொள்வதும் - தன் காதலி ஸ்ரீதேவி (சீமா)யின் நினைவினால் அவளுக்குத் துரோகமிழைக்கக் கூடாதவனாக ராமு ஒதுங்கிப் போவதும் ஒரு நிலையில் வேட்கை வெற்றி கொள்ளுவதும் விரசமில்லாத வகையில் சித்திரிக்கப் பட்டிருக்கின்றன.

துன்பியல் முடிவைக் கொண்ட மூங்கில் படத்தைத் தொய்வில்லாமல் டைரக்ட் செய்துள்ளார் ஐ.வி.சசி. - கௌசிகன்



# முதல் சாதனைகள்

## 'சலன்'

**திரு. ஜான்:**

"முதன் முறையாக அமெரிக்காவில் படமெடுத்தது நாங்கள்தான்" என்று பெருமையாகக் கூறுகிறார், ஜியோ புரடக்ஷன் தயாரிப்பாளர் ஜான்.

அதுமட்டுமல்ல எங்கள் படத்தில் தான் "டால்பின்" விளையாட்டுக்களை எல்லாம் ஐந்நூறு அடிக்குமேல் முழுமையாகக் காட்டப் போகிறோம்.

நடிகை பத்மினி திருமணமானபிறகு அமெரிக்கா சென்று தங்கிவிட்டார். அதற்குப் பிறகு எங்கள் படத்தில் தான் ஒரு முழுப் பாத்திரத்தை ஏற்று நடித்துள்ளார். அதற்காக அவர் பணமே வாங்கிக் கொள்ளவில்லை.

"நயாகரா நீர்வீழ்ச்சியில்" முதன் முறையாகப் படப்பிடிப்பு நடத்தியதும் நாங்கள் தான்." இப்படி இந்தியாவிலேயே திரைப் படத் துறையில் முதன் முறையாகப்பல புதுமைகளைச் செய்துவரும் ஜான் மேலும் சில ருசிகர சம்பவங்களையும் நம்முடன் பகிர்ந்து கொள்கிறார்.

"'ஒரே வானம் ஒரேபூமி' வண்ணத்தில் தயாராகும் இப்படத்தில், அமெரிக்காவின் பல புதுமை அம்சங்களைக் காணலாம். இது என்னுடைய மூன்றாவது படம். இதையே மலையாள மொழியிலும் எடுக்கிறேன்.

இந்தப் படத்தில் கே. ஆர். விஜயாவுடன் அமெரிக்க நடிகர் 'ஜோ வாடிங்டன்' என்ற நடிகரும் நடிக்கிறார்.

கென்னடி 'ஏர்போர்டில்' படமெடுக்க வேண்டும் என்றார் இயக்குனர் சசி. நிமிடத்துக்கு ஒரு விமானம் இறங்கிக்கொண்டோ, அல்லது புறப்பட்டுக் கொண்டோ இருக்கும் அளவுக்கு 'பிசியான' ஏர்போர்ட் அது. அங்கு படப்பிடிப்பு நடத்த இயக்குனர் விரும்ப நாங்கள் மாலை 'ஏர்போர்ட்' அதிகாரிகளிடம் பேசினோம். அப்பொழுதே எங்களுக்கு அனுமதி கொடுத்து விட்டார்கள். நாங்கள் அதிர்ச்சியடைந்து விட்டோம். இந்தியாவில் இப்படிக் கேட்டவுடன் அனுமதி கிடைக்குமா?"

ஏர்போர்ட்டில் பல இடங்களில் படப்பிடிப்பு நடத்த ஒரேசமயத்தில் அனுமதி கொடுத்த அவர்கள் எங்களுக்கு உதவ ஒரு 'கைடு' வையும் எங்களுடன் அனுப்பினார்கள்.

கனடாவில் நுழைந்தவுடன் நமக்கு ஒரு "கார்டு" கொடுக்கிறார்கள். அதைக்காண்பித்தால், நாம் அவர்கள் நாட்டில் உள்ளவரை, எந்த வியாதி வந்தாலும் அரசாங்கத்தின் செலவிலேயே சிகிச்சை அளிக்கப்படும்.

ஒருசமயம் நாங்கள் நியூயார்க்கில் இருந்து 120 மைல் தூரத்தில் சென்று கொண்டிருந்தோம். ஓர் இடத்தில் திரும்ப வேண்டும். மறந்து அந்த இடத்தைத் தாண்டிச் சென்று விட்டோம். விளைவு அந்த இடத்துக்குத் திரும்ப மேலும் 30மைல் நாங்கள் பயணம் செய்ய வேண்டிவந்தது. சிறு மறதியினால்









1. இயக்குநர் சசி, 2. தயாரிப்பாளர் 'ஜான்"
3. அமெரிக்க நடிகர் ஜோ வாடிங்டன், கே. ஆர். விஜயா
4. அமெரிக்காவில் பத்மினி, கே. ஆர். விஜயா

ஏற்பட்ட விளைவு இது. நம் நாட்டைப் போல் இஷ்டம்போல் திரும்ப முடியாது.

இதுவரை எந்த இந்தியப் படமும் அமெரிக்காவில் படமாக்கப்படவில்லை. இந்திப் படமான ''Dream Girl'' தவிர. ஆனால் அந்தப் படத்தில்கூட ஒரு பாட்டை மட்டும் தான் ''Disney World.'' படமாக்கினார்கள். அமெரிக்காவில் இருந்த இந்தியர்கள் எல்லோரும் எங்களுக்கு மிகவும் ஒத்துழைப்புத் தந்தார்கள். குறிப்பாக நடிகை பத்மினி எங்களுக்கு அதிகமாக உதவி செய்தார். அவர் இல்லை என்றால் மிகவும் கஷ்டப்பட்டிருப்போம். அது போலத்தான் வி. கே. காந்தன் என்பவரும். இப்படிப் பல தமிழர்களின் உதவியுடன் ஒத்துழைப்புடன் இந்தப் படத்தைத் தயாரித்து வருகிறேன்.''

**மனோரமா:**

''ஒரு நடிகைக்கு மிக முக்கியமானது நடிப்பும் நடனமும். அந்த இரண்டைப் பொறுத்தவரை நான் மிகவும் அதிர்ஷ்டசாலி. இந்தத் துறைக்கு வருவதற்கு முன்பாகவே நடனத்தைப்பயின்ற காரணத்தினால், படத்துறையில் நுழைவதற்கு நடனம் ஒரு நல்ல தகுதியாகவும், பல படங்களில் பலவகை நடனங்களை ஆடுவதற்கு வசதியாகவும் இருந்தது என்று கூறினால் அது மிகையாகாது.

நடனம் பலவகைப் பட்டது. சாத்தனார் அருளிய கூத்திலிருந்து இந்தக் காலத்து வெளிநாட்டு நடனங்கள்வரை ஏதாவது படங்களில் அவ்வப்போது நடனம் ஆடிக்கொண்டு தான் இருக்கிறேன். இந்தப் புலி நடனத்தைப் பெண்கள் அதிகமாக ஆடுவதில்லை. ஏன் என்றால் இந்த நடனத்தில் பலவிதமான அசைவுகளும், அதற்கேற்ற பார்வைகளும் நிறைந்தது. இவை எல்லாவற்றையும் ஒருவித மிடுக்குத்தனம் நிறைந்த அழகுடன் செய்ய வேண்டும்.

இந்தியாவிலேயே முதன் முறையாகத் திரைப்படத்தில் புலிநடனம் ஆடியுள்ள நடிகை நான்தான். வெளிவர இருக்கும் படமான 'புலி வருது புலி' படத்தில் முதன்முறையாக இந்த வகை நடனத்தை நான் ஆடவில்லை. இதற்கு முன் காலஞ்சென்ற சான்றோ திரு. எம். எம். ஏ. சின்னப்பாத் தேவரின் சகோதரர் சுப்பையா தேவர் தயாரித்த ''தாய்க்குப்பின் தமையன்'' என்ற படத்திலேயே நான் புலிநடனம் ஆடியிருக்கிறேன். இந்தவகை நடனத்தை ஆட சாதாரண நடனத்தில் உள்ள கஷ்டங்கள் என்னவோ அந்த அளவுக்கு இதிலும் கஷ்டங்கள் இருக்கத் தான் செய்கின்றன. இந்த நடனத்தில் உள்ள குறிப்பிட்டசில அழகுகள் என்னை மிகவும் கவர்ந்தன. திடீர் என்று திரும்பிப் பார்க்கும் பார்வை, புலித் தன்மையை பாவமாக முகத்தில் கொண்டு வரவேண்டிய நிலைமை, இத்துடன் புலியின் நடையழகும் இணைய வேண்டும். என்னைக் கேட்டால் நாட்டியத்தில் உள்ள உடைக்கும் இதற்கும் சில ஒற்றுமைகள் இருக்கின்றன என்பேன்.

'புலி வருதுபுலி' படத்தின் கதைப்படி நானும் நடிகர் சுருளிராஜனும் புலி நடனம் ஆடுகிறோம். எங்களுக்குள் ஏற்பட்ட நடனப் போட்டி அது. எங்கள் போட்டியுடன் முடிவில் நான் சுருளிராஜனைத் தோற்கடித்து வெற்றி பெற்றுவிடுகிறேன்.

புலி ஆட்டத்திலேயே நான் வெற்றி பெற்று விடுகிறேன் என்றால் உண்மைப் புலி என்னிடம் என்ன செய்யும் என்று சவால் விடுகிறேன். அப்பொழுது எங்கள் எதிரே? அடேடே! நான் இப்படிக் கதையையும் கிளைமாக்சையும் சொல்லிக் கொண்டே போனால் எப்படி? படம் வந்ததும் நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள். என்னைப் பொறுத்தவரை இது எனக்குப் புதுமையான அனுபவம் தான்.''



'புலிவருதுபுலி' படத்தில்
— மனோரமா



## இளையராஜா:

இந்தியாவிலேயே முதன்முறையாக ஸ்டீரியோ ஃபோனிக் என்ற முறையில் ஐந்து பாடல்களை ''ப்ரியா'' என்ற தமிழ் படத்திற்காக இளையராஜா இசையமைத்திருக்கிறார் என்று கேள்விப்பட்டவுடன் அவரைச் சந்தித்து மேலும் பல விவரங்களைக் கேட்க முடிவு செய்தேன்.

இளையராஜா புகழ் பெறுவதற்கு முன்னால், மெல்லிசைக் கச்சேரிகளை 'பாவலர் சகோதரர்கள்' (Pavalar Brothers') என்ற பெயரில் நடத்தி வந்தார். அந்தப் பெயர்ப் பலகைதான் முதலில் என்னை அவர் வீட்டில் வரவேற்றது. இளையராஜாவிடம் நான் கேள்விகளைத் தொடுத்தேன். இதோ அவரது பதில்கள்:

சாதாரணமாக எந்த ஒரு மியூசிக் டைரக்டரும் மூன்று ட்ராக்கில் தான் பாடல்களை ஒலிப்பதிவு செய்வார்கள். ஒன்று குரலுக்காகவும், மற்றொன்று வாத்தியங்களுக்காகவும், மூன்றாவது தாளத்துக்காகவும் இருக்கும். இதை மோனோ ரிகார்டிங் என்று சொல்வார்கள், வட இந்தியாவில் கூட ஸ்டீரியோ ரிகார்டுகள் வந்துள்ளன. ஆனால் அவை எல்லாம் மோனோ ரிகார்டிங் செய்து அதை இரண்டு டிராக்குகளில் ஸ்டீரியோ ரிகார்டிங்காக மாற்றப்பட்டவைதான்.

முழுமையான ஸ்டீரியோ ரிகார்டிங் செய்தது ப்ரியா படத்தில்தான். இதில் 8 டிராக்குகள், 16 சானல்கள், நான் எனது முதல் படமான அன்னக்கிளியிலேயே Sterio-Phonic முறையில் பாடல்களை ஒலிப்பதிவு செய்ய முயற்சி செய்தேன். ஆனால் அன்று நான் இத்துறைக்குப் புதியவன். என் பேச்சு எங்குமே எடுபடாது. ஒலிப்பதிவாளர்கள் (Sound Engineers) என்னுடன் ஒத்துழைக்கவில்லை. வேறு வழியில்லாமல் நான் எனது முயற்சியைக் கைவிட்டேன்.

முதன் முறையாக Sterio Phonic முறையில் பாடல்களை ஒலிப்பதிவு செய்ய வேண்டுமென்ற என்னுடைய ஆர்வத்தைப் பூர்த்தி செய்வதற்கு நேரமும் படமும் சரியாக வாய்க்கவில்லை. ''ப்ரியா'' படத்தயாரிப்பாளரிடம் என்னுடைய ஆசையைத் தெரிவித்தேன். ஆமோதித்தார்கள். அதுமட்டுமல்லாமல் செலவையும் ஒரு பெரிதாக நினைக்காமல் அனுமதித்தார்கள்.

Steriophonic முறையில் ஒலிப்பதிவு செய்ய முன்னேற்றமடைந்த ஒலிப்பதிவுக் கருவிகளைப் பாடகர் திரு ஜேசுதாஸ் வாங்கி வைத்திருந்தார். அருணாசலம் படப்பிடிப்புக் கொட்டகையில் ஓர் ஒலிப்பதிவுக் கூடத்தை அவர் அமைத்துக் கொண்டிருந்தார். ஆனால் அது முடிவடையவில்லை. எங்களுக்கோ அவசரம். நான் கேட்டுக் கொண்டதின் பேரில் அக்கருவிகளை எல்லாம் எடுத்துக்கொண்டு வந்து பரணி ஒலிப்பதிவுக் கூடத்தில் வைத்து ஐந்து பாடல்களையும் உடனிருந்து ஒலிப்பதிவு செய்ய உதவி செய்தார். ஆனால் இவற்றுக்கெல்லாம் ஒரு பைசாகூட வாங்கிக் கொள்ளவில்லை என்பது அவரது பெருந்தன்மையைத்தான் காட்டுகிறது.

''ப்ரியா'' படத்தின் ரிகார்டுகள் ஜெர்மன் நாட்டில் ப்ரஸ் (Pressing) செய்யப்பட்டு கல்கத்தாவில் கட் (Cutting) செய்யப்படும். ஏனென்றால் இந்தியாவில் Pressing கிடையாது. Steriophonic முறையில் சில பாடல்கள் வந்திருக்கின்றன என்றாலும் முதன்முறையாக 8 டிராக்குகளில் ஒலிப்பதிவு செய்து வெளிவரும் ரிகார்டுகள் இப்படத்தினுடையவைதான்.

இதில் குறிப்பாக ஒரு பாடலுக்கு மட்டும் 115 வாத்யங்களை உபயோகித்திருக்கிறேன்'' என்று ஆர்வத்துடன் கூறினார் இளையராஜா.



## நிமாய் கோஷ்:

''நான் முதன்முதலில் இந்தியாவிலேயே ஜீவகளையுள்ள (New realistic) ஒரு படத்தை எடுத்தேன். அந்தப்படத்தின் பெயர் ''சின்ன மூள்'' வங்காள மொழியில் எடுக்கப்பட்ட படம்தான் இந்தியாவிலேயே முதன்முதலாக ஜீவகளையுள்ள படமாகும். இப்படம் இத்தாலியில் டி. டெஸிகா எடுத்தபடம்போல் புதுமையானது. இப்படத்தின் கதை அகதி வாழ்க்கையையும் வங்காளத்தில் ஒரு பாகத்தில் நடப்பது போலவும் சித்திரிக்கப் பட்டுள்ளது. இப்படம் சினிமாவின் பல்வேறு துறைகளிலும் பரி

சோதனைப்படமாக எடுக்கப்பட்டது. முதலில் இதில் நடித்தவர்கள் யாரும் தொழில் முறை நடிகர்கள் அல்ல. (1) இதில் நடித்தவர்கள் பாதிப்பேர் அமெச்சூர் நடிகர்களாகும்.

இந்தப் படத்தில்தான் நடிகர் நடிகைகளை முதன் முதலில் மேக்கப் போட்டுக் கொள்ளாமல் நடித்தார்கள். இப்படத்தில்தான் முதன்முதலில் நம் நாட்டு இசைக்கருவிகளை வைத்துக்கொண்டே இசையமைக்கப்பட்டது. இப்படத்தில் பாடலே கிடையாது. 75 சத விகிதம் வெளிப்புறப் படப்பிடிப்பும் 25 சத விகிதம் படப்பிடிப்பு நிலையங்களிலும் எடுக்கப் பட்டது. இப்படத்தின் வசனங்கள் சாதாரண மாக மக்கள் பேசிக்கொள்ளும் வகையிலேயே அமைக்கப்பட்டன. வங்காள மொழியின் பழக்க வழக்கங்களையும் பழமொழிகளையும் இணைத்து 1948–49ல் தயாரிக்கப்பட்டது இப்படம். இதில் மிகமிக முக்கியமானது என்னவென்றால் இந்தியாவிலேயே முதன் முறையாக கேமிரா இருக்கும் இடம் தெரி யாமல் நடிகர் நடிகைகள் நடித்தபடம். சாதா ரணமாக இதில் நடிக்கும் நடிகர் நடிகைகளை அழைத்து இப்படியெல்லாம் நீங்கள் பேச வேண்டும் இப்படிச் செய்ய வேண்டும் என்று விவரமாகக் கூறி அவர்களை உண்மையான அகதிகளின் கூட்டத்தில் விட்டுவிட்டு நான் ஒருமூலையில் வந்து நின்றுவிடுவேன். வெள்ளை நிறக் கைக்குட்டையை எடுத்துமேல் நோக்கிக் கைகளை அசைத்துக் காண்பிப்பேன். எனக்கும் உதவியாளருக்கும் மட்டும் தெரிந்து எங்கோ ஓரிடத்தில் மறைத்து வைக்கப்பட்டிருக்கும் கேமரா சுழல ஆரம்பிக்கும். கட் என்பதற்குப் பதிலாகச் சிவப்புக் கைக்குட்டை கையுடன் மேல்நோக்கி எழும். சுழலும் கேமிரா நிற்கும்.

மறைத்து வைக்கப்பட்டிருப்பதால் காமிரா எங்கு உள்ளது என்று தெரியாம லேயே நடிகர் நடிகைகள் நடிப்பார்கள். இப்படிப் புதுமையான முறையில் எடுக்கப் பட்டதுதான் இப்படம்.

இப்படம்தான் முதன் முதலில் ரஷ்யாவில் பதினெட்டு தியேட்டர்களில் ஒரே சமயத்தில் வெளியிடப்பட்டது. இதன் தொடர்பாக ரஷ்யா அழைக்க நான் சென்றிருந்தேன். அங்குதான் திரு. கே. சுப்ரமணியம் அவர்களையும் திரு. என். எஸ். கிருஷ்ணன் அவர்களையும் சந்திக்கும் வாய்ப்பைப் பெற்றேன். எங்கள் குழுதான் முதன்முதலில் ரஷ்யா வுக்குச் சென்ற திரைப்படக்குழு. இவர்கள் இருவர்தான் நான் தென்னகம் வரக் காரணமாயிருந்தவர்கள்'' என்று கூறுகிறார் ஒளிப்பதிவாளரும் டைரக்டருமான நிமாய் கோஷ்.

**ஜி. காமேஷ்:**

● மலேஷியாவில் தயாரிக்கப்பட்ட முதல் தமிழ்ப்படம்.

● அந்தப் படத்துக்கு முன்தமுதலில் இசையமைக்க அழைக்கப்பட்டு இந்தியாவி லிருந்து சென்ற முதல் இசையமைப்பாளர் நான்.''

இப்படி ஒரு சாதனையைச் சாதித்து விட்டு மிகவும் அமைதியாக உட்கார்ந்திருந்தார் ஜி. காமேஷ்.



''மெல்லிசைக் கச்சேரி செய்ய ஆரம் பித்தது எப்போது?'' என்று நான் கேள்வியை முடிக்கும் முன்பே காமேஷ் பதிலளிக்கத் தொடங்கிவிட்டார். ''நான் சிறு வயதி லிருந்தே இசைத் துறையில் நாட்டம் கொண் டிருந்தேன். முதன்முதலில் மெல்லிசைக் கச்சேரி ஒன்றைச் சென்னையில் செய்தது நான்தான். கிட்டத்தட்ட ஆயிரத்துக்கும் மேற்பட்ட கச்சேரிகளை நான் இதுவரை செய் துள்ளேன். பல பாடகர்கள், என்னிடம் பாடி விட்டுத்தான் இப்பொழுது படங்களிலும், மெல்லிசைக் கச்சேரியிலும் பாடுகிறார்கள்.

நான் முதன்முதலில் மலேஷியாவில் இசை யமைக்கச் சென்றேன். அப்படத்தின் பெயர் ''துன்பங்கள் உறங்குவதில்லை''. இந்தியாவி லிருந்து சென்ற முதல் இசையமைப்பாளர் நான்தான்... அங்கு மூன்று மாதகாலம் தங்கி யிருந்து ஆறுபாடல்களை ஒலிப்பதிவு செய்து விட்டு வந்தேன். அந்தப் படத்தில் நடிப்ப வர்கள், பாடுபவர்கள் எல்லாமே மலேஷியக் கலைஞர்கள்தான். இதன் தயாரிப்பாளர் பிலிப்ஸ் அன்டோனி. அங்கு இருந்த சில இசைக்கலைஞர்கள் எனது இசையமைக்கும் திறமையைப் பார்த்துப் பாராட்டினார்கள்.

படம் முடிந்துவிட்டது. நான் திரும்பவும் மலேஷியா சென்று ரீரிக்கார்டிங் செய்ய வேண்டியதுதான் பாக்கி.

இப்பொழுது செல்லும் போது அங்கு அர சாங்கத்தின் ஆதரவில் தயாராகும் ஒரு தமிழ்ப் படத்திற்கு இசையமைக்கப் போகி றேன். படத்தின் பெயர் 'மங்கல ஓசை': இதில் என் மனைவியும் நடிக்கிறாள்.'

எழுத்தாளர் ஜெயபாரதி தயாரித்த 'குடிசை' படத்தில் என் மனைவி கதாநாயகி யாக நடித்திருக்கிறாள். முதன்முதலில் இந்தி யாவிலிருந்து குறிப்பாகத் தமிழகத்திலிருந்து மலேஷியா சென்று நடிக்கும் முதல் பெண் மணி என் மனைவிதான் என்று கூறலாம்'' என்றார் காமேஷ் பெருமையுடன்.

மலேஷியா சென்று வெற்றிகரமாகத் திரும்ப எனது வாழ்த்துக்களைக் கூறி விடை பெற்றேன்.

# புயல் அரக்கனும்....
# அதனை வென்ற சாதனையும்

ஆந்திரப் பிரதேசத்தில் புயல் வீசிப் பாழான கடற்கரை மாவட்டப் பகுதிகளில் உள்ள பச்சைப் பயிர்கள் மீது காலைச் சூரியனின் பொன்னிறக் கிரணங்கள் பட்டுப் பூரித்து மகிழ்வ தோடு அவை நடனமுமாடுகின்றன. கிருஷ்ணு, கோதாவரி மாவட்டங்களில் பெருஞ்சேதமுற்ற இடங்களில் இன்று செங்கலுக்கு மேல் செங்கல் வரிசையிட்டுக் குடியிருப்புக்கள் எழும்பும் அதிசயத்தைக் காண்கிறோம்.

புயல் அரக்கனின் கொடிய பணிகளினால் இருண்டு கிடக்கும் பகுதிகளுக்கு, இயற்கையின் சீற்றத்தினால் பெரு நஷ்டங்களுக்குள்ளான அபலைகளுக்கு ஒரு நம்பிக்கைக் கதிர் ஒளியாக, பலமுனைக் கஷ்ட நிவாரணப் பணித் திட்டம் விளங்குகிறது.

'வீடற்றவர்களுக்கு வீடு' என்ற கோஷம் வெறும் வார்த்தைப் பந்தல் அல்ல. இந்தக் கோஷம் இன்று புயலால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் ஒரு நிதர்சன உண்மையாக வீடுகளாக எழும்பிக் காட்சியளிக்கிறது. இதுவரையில் மொத்தம் 20,000 தேவைப்படும் வீடுகளில் 13,000 வீடுகள் கட்டப்பட்டுள்ளன. சேவைக் கழகங்களின் ஆதரவுடனும் முதன் மந்திரியின் புயல் கஷ்ட நிவாரண நிதியிலிருந்தும் இந்த வீடுகள் பூர்த்தியாகியுள்ளன. கடற்கரை மாவட்டங் களிலுள்ள பகுதிகளில் புயலால் பாதிக்காத தங்குமிடங்கள் சங்கிலித் தொடர்போல் நிர்மாணிப்பதற்குத் துரித நடவடிக்கை எடுக்கப்படவிருக்கிறது.

D.G.I & P.R. 35/78-79

# குப்பத்து ராஜா ☆ பட விமரிசனம்



தேர்தல் காலத்திலேதான் குப்பத்துக்கு யோகம் அடிக்கும். இப்போது சினிமாக்காரர்களும் குப்பத்துப் பக்கம் கவனம் செலுத்துகிறார்கள். ரௌடி ரங்கன் பவனி வந்தான். இப்பொழுது 'குப்பத்து ராஜா' பவனி வருகிறார்.

ஒருவனைக் கொன்று பழி தீர்த்துக் கொள்ளும் ஜக்கு, விதியின் விளையாட்டால் இறந்தவனுடைய மகனுக்கே உற்ற நண்பனாகிறான். அந்த நண்பன் செல்வமோ ஜக்குவைப் பழி வாங்கத் துடித்துக் கொண்டிருக்கிறான். ஆனால் தன் தகப்பனாரின் மரணத்துக்காகத் தான் பழிவாங்கத் துடித்துக் கொண்டிருப்பது இந்த ஜக்குவைத்தான் என்பது தெரியாமலேயே அவனுடன் நட்புரிமை பாராட்டுகிறான். ரஜினி காந்த், ஜக்குவாக, குப்பத்து ராஜாவாகத் தம் இயல்பான நடிப்பினால் உயர்கிறார். தான் யாரென்று நண்பனுக்குத் தன் செல்லத் தங்கை கழுத்தில் தாலி ஏறிய பிறகு தெரிவிக்க நினைக்கிறான் ஜக்கு. அதற்குள் கதையில் ஒரு திருப்புமுனை ஏற்பட்டு விடுகிறது.

கோகுல்தாஸ் என்ற பணக்காரன் இவ்விரு நண்பர்களுக்கும் இடையில் பகை வளர்க்கும் விஷத்தை ஊட்டுகிறான்! இந்தப் படத்தில் யார் வில்லன் யார் கதாநாயகன் என்று 'முடிவு' எடுக்க முடியாதபடி கதை பின்னப்பட்டிருக்கிறது!

ரஜினி காந்துக்கு முரட்டுத் தன்மை கை வந்த கலை. அவரோடு விஜயகுமாரும் போட்டி போட்டுச் செயல் படுகிறார்.

டிஷ்யூம் டிஷ்யூம் சண்டைகளுக்கோ காதல் களியாட்டங்களுக்கோ 'குப்பத்து ராஜா'வில் பஞ்சமில்லை!

மஞ்சுளா இரு பகைவர்களுக்கு மத்தியில் நேசம் வளர உதவும் ஊடுபாவு. பத்மப் பிரியாவை ஜக்கு சிவப்பு விளக்குப் பகுதியில் தள்ளிப் 'பழி' தீர்க்க நினைப்பதும், சாக்கடையில் விழுந்தும் தான் அழுக்குப் படாதவன் என்று பத்மப்ரியா சொல்வதும் இயற்கைக்கு ஒவ்வாத காரியங்கள்!

டி. ஆர். ராமண்ணா, டைரக்ட் செய்துள்ள படத்தில் குப்பத்து பாஷையில் மனோரமா சக்கைப்போடு போடுகிறார்.

''கொடி கட்டிப் பறக்குதடா — காலம் குடிசைக்குப் பொறக்குதடா!'' என்ற கண்ணதாசனின் பாடல் காலத்துக்கு ஏற்ப ஒலிக்கிறது! 'மாஸ் அப்பீல்' தயாரிப்பு! ரஜினி காந்த் நடிப்புக்காகவே விரும்பிப் பார்க்கலாம்!

- பி. எஸ். எம்





# அப்பாவிப் பெண்

பெருந்துறை நாராயணன்

யமுனாவுக்கு அது ஒரு புதிய அனுபவம். தலையை நிமிர்த்தி ஆபீஸ் முழுதும் பரவலாகப் பார்த்தாள் அவள். அலுவலகம் அன்றுதான் புத்தம் புதிய கட்டிடத்துக்கு மாற்றப்பட்டிருந்தது. பழைய தாழ்ந்த ஓடுபில்லைக் கட்டிடத்துக்கும், உயரமான இந்தக் 'கான்கிரீட் கட்டிடத்துக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்? ஒருபுறம் புதிய பர்னிச்சர்களின் வார்னிஷ் மணம் நாசியைத் தாக்க, வெளிர்நீல டிஸ்டெம்பர் அடித்த சுவர்களும், பச்சையும் அலுமினியக் கலருமாக பெய்ண்ட் அடித்த கிரில் ஜன்னல்களும், புதிய எலெக்ட்ரிக் ஃபிட்டிங்குகளுமாக எல்லாம் தகதகவென்று இருந்தன. இவ்வளவு நவீனமான கட்டிடத்தில், இதுவரை அவள் கண்டிராத ஒரு பரபரப்பில், இத்தனை கலகலப்பான சூழ்நிலையில் இனிமேல் ஒவ்வொருநாளும் வேலை செய்யப் போகிறோம் என்ற எண்ணம் அவளைக் கிளுகிளுக்க வைத்தது. யமுனா இப்போதுதான் மாற்றலாகி வந்திருந்தாள்.

ஆபீஸ் முழுதும் குழல் விளக்குகள் — அதுவும் வெள்ளை பிளாஸ்டிக் சல்லடை மூடிய இரட்டைக் குழல் விளக்குகள் பகலிலும் பளீரென்று எரிந்து கண்ணைப் பறித்தன.

டெஸ்பாட்சிங் செக்ஷன்தான் மாலை நெடுநேரம் வரை வேலை செய்யும் பகுதி. அட்டெண்டர் வேணு டிரே நிறையக் கடிதங்களை வைத்துவிட்டுப் போன மறுகணமே மும்முரமாக வேலையில் ஈடுபட்டாள் யமுனா. என்னமோ அவள் வேலையைக் கண்டு மலைத்ததில்லை. இன்று ஏதோ ஒன்று அவளைச் சிரமப்படுத்தியது. சட்டென்று குழல் விளக்குகளைப் பார்த்தாள் அவள். ஆபீஸ் முழுவதும் இருந்த எல்லா விளக்குகளும் ஜகஜ்ஜோதியாக எரிந்து கொண்டிருந்த போது, யமுனாவின் செக்ஷனில் இருந்த குழல் விளக்குகள் மட்டும் அவ்வப்போது கண்களைச் சிமிட்டின. விட்டு விட்டு எரிந்தது பெரிய தொந்தரவாக இருந்தது. சில நிமிஷங்களில் இரண்டு குழல் விளக்குகளும் சட்டென்று அணைந்துவிட்டன. வெளியில் மப்பும் மந்தாரமுமாக இருந்ததால் அவளுடைய பகுதியில் அதிகமாக இருள் சூழ்ந்திருந்தது. வெறுப்புடன் சுற்றுமுற்றும் பார்த்தாள் யமுனா. தூரத்தில் அட்டெண்டர் வேணு அவள் பக்கமாகத் திரும்புவது தெரிந்தது.

கையை அழகாக நீட்டி ''வேணு! ஒன் மினிட்...!'' என்று முறுவலித்தாள் யமுனா.

வேணு வந்ததும் விளக்குகளைச் சுட்டிக் காட்டினாள்.

''இதுதானேம்மா? லூஸ் — காண்டாக்ட் இல்லேன்னு ஸ்டார்ட்டர் டிரபிளா இருக்கும். இதோ ஒரு நிமிஷத்திலே அட்ஜஸ்ட் பண்ணி எரிய வைக்கிறேன், சுவிச்சை ஆஃப் பண்ணுங்க!'' என்று கூறியவாறே, ஜன்னல் கிரில் மேல் காலை வைத்து, காங்கிரீட் ஸ்லாப்புகளின்மேல் ஏறி, தொங்கிக் கொண்டிருந்த இரட்டைக் குழல் விளக்குகளை எட்டிப் பிடித்தான் வேணு. அவன் குழல்விளக்குகளின் பிளாஸ்டிக் வலையை மெல்ல அகற்றி, ஸ்டார்ட்டரை இப்படியும் அப்படியுமாகத் திருகிக் கொண்டிருந்தான்.

''சுச்சி போடுங்கம்மா!''

யமுனா 'ஆன்' செய்தாள்.

குழல் விளக்குகள் மறுபடியும் கண் சிமிட்ட ஆரம்பித்தன. விளக்குத் தண்டுகளை இலேசாகத் திருகினான் வேணு.

''தடால்!'' என்று ஒரு சத்தம். தொடர்ந்து ''கிளுங்... கிளுங்...'' என்று கண்ணாடி உடையும் ஒலி. பிறகு நிசப்தம். ஆபீசே டெஸ்பாச்சிங் செக்ஷனைத் திரும்பிப் பார்த்தது.

'சீலிங்ரோஸ்' களின் இணைப்பு கழன்று, புத்தம் புதிய இரட்டை டியூப்லைட் ஃபிட்டிங், தரையில் விழுந்து நொறுங்கிச் சிதறியது!

திகைப்பில் வாயடைத்துப் போனாள் யமுனா.

சில நிமிஷங்கள் கழித்து மானேஜர் யமுனாவைக் கூப்பிட்டதாக வேணு அவளை அழைத்தான்.

எந்த வகையில் அவளை மட்டம் தட்டலாம் என்று மானேஜர் தங்கராஜ்காத்திருந்ததாகப் பட்டது யமுனாவுக்கு. சுற்றி வளைக்காமல் நேரே விஷயத்துக்கு வந்தான் அவன்.

''மிஸ் யமுனா! ஐ யாம் வெரி ஸாரி! இரண்டு டியூப்—லைட் சேர்ந்த ஃபிட்டிங் ஒன்றின் விலை இருநூற்று நாற்பதுரூபாய். ஆபீஸருக்கு விஷயம் தெரிவதற்கு முன் சீம்பட்டத்திலேயே இதைச் சரிசெய்து விடுவது எல்லாருக்கும் நல்லது!... ஆபீஸர் எப்பேர்ப்பட்டவர் என்பதுதான் உனக்கும் வேணுவுக்கும் தெரியுமே...''

ஆபீஸரிடம் யமுனாவுக்குப் பயம்தான் என்றாலும், எல்லோருடனும் பேசுவது போல் மானேஜர் தங்கராஜிடம் அவள் பளிச்சென்று பேசுவாள்.

''அதெப்படி ஸார் என்மேல் பழியைப் போடுகிறீர்கள்? நான் ஒன்றும் பண்ணவில்லையே ஸார்! ஸ்விச்சைத் தானே போட்டேன்! டியூப் லைட் அதுவாகத்தானே கீழே விழுந்தது?''

''யு ஆர் கரெக்ட் மிஸ் யமுனா! நீசொல்லித் தானே வேணு மேலே ஏறி அதைத் தொட்டான்!... உன்னை மட்டும் நான் ஸிங்கிள்—அவுட் பண்ணலையே? நீங்க ரெண்டு பேரும் தான் இதற்கு ரெஸ்பான்ஸிபிள்...''

''வேணுவை ஏன் ஸார், பாவம், இதிலே இழுக்கறீங்க? தொட்டதுமே விழுந்துட்டதே. அப்ப ஃபிட்டிங் செஞ்சதுலே ஏதோ ஃபால்ட் இருக்குன்னுதானே ஸார், அர்த்தம்?... நீங்க ஏற்பாடு பண்ணின வயரிங் கண்டிராக்டர்தானே ஸார் இதெல்லாம் செஞ்சது? அவரைக் கூப்பிட்டு டாக்கிள் பண்ணுமே என்னை ப்ளேம் பண்றது நியாயமா ஸார்?''

தங்கராஜுக்குச் சுரீரென்றது. என்ன மாய்ப் பேசுகிறாள் இந்தப் பெண் யமுனா... தன்னுடைய வீக் — பாயிண்ட்டைக் கண்டு பிடித்துவிட்டாளே! வயரிங் கண்டிராக்டர் அவனுடைய மச்சினன்தான் என்பது அவளுக்குத் தெரிய நியாயமில்லை... அப்போதுதான் ஏதோ வேலையாக மானேஜரின் அறையினுள் நுழைந்த வேணு, யமுனாவின் பேச்சை ஆமோதிக்கும் பாவனையில் அங்கேயே நின்றிருந்தது அவளுக்கு மேலும் எரிச்சலை ஊட்டியது. வயரிங் கண்டிராக்ட் எல்லாம் தங்கராஜின் ஏற்பாடு தான் என்பதை வேணு அவளிடம் சொல்லியிருப்பானோ?... இருக்கட்டும். யமுனாவை மடக்க வழியா இல்லை?

''டோன்ட் ஆர்கியூ, மிஸ் யமுனா!... இப்பத்தான் படாத தொல்லையெல்லாம் பட்டு, மாசக் கணக்காய்க் காத்திருந்து உனக்கு ஹெட் ஆபீஸ் போஸ்டிங் கிடைத்திருக்கிறது. இந்த விஷயத்துலே பணம் போவுதேன்னு தயங்கி மயங்கி நின்னே, மறுபடியும் அந்தத் தண்ணியில்லாக் காட்டுக்குப் போக வேண்டியதுதான்!''

தங்கராஜ் என்ன சொல்கிறான் என்பது அவளுக்குப் புரிந்தது. வெளியூர் கிளை அலுவலகத்தில் அவள் பணி புரிந்தபோது, அங்கே சக ஊழியன் பணியிடம் ஒரு மாதிரியான தகராறு ஏற்பட்டுப் பெரிய ரகளையாகி, இப்போது அவள் தலைமை அலுவலகத்துக்கு மாற்றலாகி வந்தபின் ஒருவாறு அடங்கியிருந்தது. மறுபடியும் அந்த பணியிடமா? அவளுக்குக் குலை நடுங்கியது. இப்போதுகூட சிலர் அவளையும் பணியையும் சேர்த்துக் கிசுகிசுப்பது அவளுக்குத் தெரியும்...

''ஓகே, ஸார்! நல்லெண்ணத்தோட எனக்கு ஹெல்ப்பண்ண வந்த வேணுவை இந்த வம்பிலே மாட்டி விடாதீங்க ஸார்! வேணும்னு அந்த டியூப்லைட் காஸ்ட் முழுவதும் என்னுடைய சம்பளத்திலிருந்தே ரிகவர் பண்ணைக்குங்க!'' என்று அலட்சியமாகக் கூறிவிட்டு நகர்ந்தாள் யமுனா. நன்றி பொங்கும் கண்களுடன் வேணு தன்னைப் பார்ப்பதை அவள் கவனிக்கத் தவறவில்லை.

தன் வீட்டில் போய் உட்கார்ந்த யமுனா நெடு நேரம் சிந்தனையில்





''சைக்கிள் வைச்சிருக் கிறவனை எல்லாம் உதைக்கணும்.''

''எதுக்கு இவ்வளவு கோபம்?''

''சைக்கிள் திருடின துக்காக என்னை ரெண்டு மாசம் உள்ளே தள் ளிட்டாங்க.''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

சூழ்கிறாள். சமீபத்திய நிகழ்ச்சிகள் கெட்ட கனவைப்போல் அவள் நினைவில் பளிச்சிட்டு மறைந்தன. மானேஜர் தங்கராஜின் மேல் கோபம் கோபமாக வந்தது அவளுக்கு. 'நெருப்பில்லாமல் புகையுமா?' என்று அவள் வந்த புதிதில் அவன் எகத்தாளமாகப் பேசியது அவளுக்கு இன்னும் நினைவிலிருந்தது. அப்படி என்னதான் நடந்து விட்டது அங்கே?

எல்லோருடனும் சகஜமாகப் பழகும் சுபாவம்தான் யமுனாவை இக்கட்டில் கொண்டு போய்விட்டது. மணி திருமணமானவன். அவன் அவளுடைய பக்கத்து ஸீட்டில் இருந்த தோஷத்தால் அவளிடம் அடிக்கடி பேச வேண்டிய வாய்ப்பு இருந்தது. சிலவேளை அவள் சிரித்தும் பேசியிருக்கக்கூடும். அந்தக் கிளை அலுவலகத்தின் மானேஜருக்கு யமுனாவின் வயதில் ஒரு மகள் இருந்ததால் அவர்கள் வீட்டிலும் யமுனாவுக்குப் பழக்கம் ஏற்பட்டது. ஒரு சனிக்கிழமை அவளுடன் யமுனா பகல் காட்சி ஒன்றுக்குப் போக நேரிட்டது. அதே காட்சிக்கு மணியும் தற்செயலாக வந்திருந்தான். காட்சி முடிந்து திரும்பும்போது யமுனாவைப் பார்த்து இரண்டு வார்த்தை சகஜமாகப் பேசியவாறே தியேட்டரிலிருந்து அவன் வெளியே வந்ததை யாரோ பார்த்து, அவன் மனைவியிடம் திரித்துச் சொல்லிவிட்டிருக்கிறார்கள். மணியின் மனைவி ஒரு ஹிஸ்டீரியா கேஸ். மறுநாள் ஆபீஸுக்கே வந்து யமுனாவைக் கண்டபடி திட்டி விரசமாகப் பேசி விட்டாள். அவள் நடத்தையைக் கண்டு கோபமடைந்த அவள் கணவன் மணி, பலர் முன்னிலையில் அவளைச் சக்கையாக அடித்து நொறுக்கிவிட்டான். இதை யெல்லாம் கண்டு அதிர்ச்சியடைந்த யமுனாவினால் அழுவதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை. கடைசியில் விஷயம் ஆபீஸர் வரைக்கும் தெரிந்து, மேற்கொண்டு தகராறு அதிகமாகாமலிருக்கும் பொருட்டு யமுனாவை ஹெட் ஆபீஸுக்கு மாற்றல் செய்து விட்டார்கள். தான் நிரபராதி என்பது அவளுக்குத் தெரியும். ஊருக்கு எங்கே தெரியப் போகிறது? அதுவும் ஓர் இளம் பெண்ணைப் பற்றி அவதூறாகப் பேசுவதில் பொதுவாக எல்லோருக்கும் இருந்த ஆர்வத்தைக் கண்டு மனத்துக்குள் பொருமினாள் யமுனா.

இறுதியில் டியூப்-லைட்டுகளின் கிரயத்தை மாதம் நாற்பது ரூபாயாக ஆறு தவணைகளில் மாதச் சம்பளத்திலேயே பிடித்துக் கொள்ளும்படி, மானேஜர் கேட்டுக் கொண்டபடி ஒப்புதல் எழுதித் தந்து விட்டாள் யமுனா. அதைப் படித்து விட்டுத் தங்கராஜ் நமட்டுச் சிரிப்புச் சிரித்தது அவளுக்கு எரிச்சலை உண்டாக்கியது. தங்கராஜை மட்டந்தட்ட தன் சர்வீஸ் முழுவதிலும் ஒரு வாய்ப்புக் கூட வராதா என்று ஏங்கியது அவள் மனம்...

மறுநாள் ஆபீஸரின் அறையில் ஏக தடபுடலாக இருந்தது. பழைய கட்டிடத்திலிருந்து கொண்டு வந்த சார்ட்டுகளை வேணு சுவரில் ஆணியடித்து மாட்டிக் கொண்டிருந்தான். கடைசி சார்ட்டை நீளமான கருளாகக் கையில் எடுத்துக் கொண்டு வந்தார் மானேஜர் தங்கராஜ். அதை மாட்ட வேண்டிய இடத்தை ஆபீஸர் வேணுவிடம் காட்டிக் காட்டினார்.

'டக்... டக்... டக்' கென்று சுவரில் ஏற்கெனவே பதித்திருந்த மரப்பிளக்குகளில் ஆணிகளை அடித்தான் வேணு. அவன் அடித்த வேகத்தில் கட்டிடமே அதிர்ந்தது.

'தடால்!' என்ற ஓசையைக் கேட்டு நிறுத்தினான் வேணு. 'கிணுங்... கிணுங்...'கென்று கண்ணாடி உடையும், சப்தம்...

திக்பிரமையடைந்து எழுந்தார் அதிகாரி. அவருக்கு மேலே இருந்த இரட்டை டியூப் லைட்டுகள் மேஜையின்மேல் விழுந்து நொறுங்கிக் கிடந்தன! தங்கராஜின் முகம் பேயறைந்ததைப் போலக் காட்சியளித்தது.

''என்ன மிஸ்டர் தங்கராஜ்? என்ன ஃபிட்டிங் இது? நல்ல எலெக்ட்ரீஷியனைப் பார்த்துச் சொல்லியிருக்கக் கூடாதா? யார் அந்த வயரிங் கண்டிராக்டர்? அவனை உடனே அழைத்து வந்து இந்தக் காட்சியைக் காண்பியும்!'' என்று எரிந்து விழுந்தார் அதிகாரி.

தங்கராஜ் வெலவெலத்துப் போனான். அவன் வாயே திறக்கவில்லை. வேணு அவனையே வெறித்துப் பார்த்தான். மானேஜரின் மௌனத்தை அவனால் ஜீரணிக்க முடியவில்லை. நேற்று யமுனா தன்னைப் பொருள் நஷ்டத்திலிருந்து காப்பாற்றியதும் அவன் நினைவுக்கு வரவே, அசாதாரணத் துணிச்சலுடன் பேசினான் அவன்.

''ஐயா! இப்படித் தாங்க நேத்து சாயந்திரம் நீங்க போன பிற்பாடு டெஸ்பாச்சிங் செக்ஷன்லே இருந்த டியூப்லைட் ஃபிட்டிங்கும் விழுந்துட்டதுங்க! அந்தம்மா யமுனாகூட இருநாத்தி நாற்பது ரூவா கட்டிக் குடுக்கணுமேன்னு வருத்தப்பட்டுக்கிட்டு இருந்தாங்க!'' என்றான் வேணு.

''வாட் நான்சென்ஸ்!'' என்று ஆரம்பித்த அதிகாரி யமுனாவையும் அழைத்து விசாரித்த பின் அரைமணிநேரம் இடைவிடாமல் மானேஜர் தங்கராஜைத் திட்டித் தீர்த்தார். ''முதல்லே அந்த வயரிங் கண்டிராக்டர் பில்லே பெண்டிங்கிலே போடும்! அவனைக் கூப்பிட்டு, சீலிங் ரோஸ் வைத்துத் தொங்கும் எல்லா டியூப் லைட் ஃபிட்டிங்குகளையும் எடுத்து விட்டு, மேலே கான்கிரீட் பீமின் மேல் ஆங்கிள் கொடுத்து டியூப் லைட்டுகளை ஸ்ட்ராங்காக மாட்டச் சொல்லும்! அதைச் செய்தால்தான் அவன் பில் பாஸாகும்! யமுனாவின் சம்பளப் பிடிப்பு ஆர்டரை முதலில் கான்ஸல் செய்யும்!'' என்று கர்ஜித்தார்.

நெடுநாட்களுக்குப் பிறகு அன்றுதான் அப்பாவிப் பெண் யமுனாவின் முகத்திலே பழைய மலர்ச்சி ஏற்பட்டது.

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியக் காசு